# கல்கி

பொருளடக்கம்

விரோதிக்ருது ஐப்பசி 14 - அக்டோபர் 31, 1971




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




| சந்தா விவரம்: | ஒருவருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 45-00 | ரூ. 22-50 |

பாருங்கள்...வித்தியாசத்தை!

# வெண்மை பளிச்சிடச் செய்வதில் இணையற்றது டினோபால்


விளைவுகளே கூறுகின்றன! துவைத்த துணிகளை அலசுவதற்குமுன் வாளியிலுள்ள தண்ணீரில் சிறிதளவு டினோபால் சேர்க்கவும். பிறகு பாருங்கள் சலவையின் வெண்மை எப்படிப் பளிச்சிடுகிறது என்று! சட்டை, புடவை, படுக்கை விரிப்பு, டவல் எல்லாமேதான்!

இத்தனைக்கும் ஆகும் செலவு, துணிக்கு ஒரு பைசாவுக்கும் குறைவு! டினோபால் வாங்குங்கள். ரெகுலர் பாக், எகானமி பாக் மற்றும் ஒரு வாளித் துணிக்கு ஒரு பாக்கெட் ஆகிய மூன்று அளவுகளில் கிடைக்கிறது.


டினோபால் என்ற பெயர் ஜே.ஆர்.கெய்கி எஸ்.ஏ. பாஸல் ஸ்விட்சர்லாந்து நிறுவனத்தாரின் ரிஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க் ஆகும்.

சுஹ்ரித் கெய்கி லிமிடெட், த.பெ. 11050, பம்பாய்-20 BR.

Shilpi HPMA 12A/70 Tam

கல்கி

மலர் 31

இதழ் 14



தமிழ்த் திருநாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
-- பாரதியார்

# விலைவாசியும் கண்ட்ரோல் முறையும்

**வி**லைவாசிகள் மேன்மேலும் உயர்ந்து கொண்டே போவதற்கு வேண்டிய எல்லாக் காரியங்களையும் செய்துவிட்டு விலைவாசி உயர்வைத் தடுக்க நடவடிக்கைகள் எடுக்கப்படும் என்று எந்த அரசாங்கமாவது சொன்னால் அத்தகைய பேச்சு கேலிப் பேச்சாகவே ஆகும்.

விலைவாசி உயர்வுக்குக் காரணங்களை ரிசர்வ் பாங்கியின் ஆண்டறிக்கை சுருக்கமாகச் சொல்லி விளங்க வைத்திருக்கிறது.

தொழிற் சாலைகளில், கச்சாப் பொருள்கள் போதிய அளவு கிடைக்காததாலும், இதர காரணங்களாலும், உற்பத்தி குறைந்து கொண்டுவருகிறது. இந்த நிலைமையை மாற்ற வேண்டும்.

மேலும் மற்றொரு காரணமாகப் பண வீக்கத்தையும் ரிசர்வ் பாங்கி குறிப்பிட்டிருக்கிறது. அரசாங்கத்துக்கு அதன் செலவுகளுக்காக மட்டும் பாங்குகள் அளித்துள்ள கடன் சென்ற ஓராண்டு காலத்தில் 924 கோடி ரூபாய் என்று கணக்குக் காட்டியிருக்கிறது.

எஃகு போன்ற முக்கிய தேவைப் பொருள் சர்க்கார் தொழிற்சாலைகளிலிருந்துதானே வரவேண்டி யிருக்கிறது? இத்தகைய தேவைப் பொருள்களுக்குப் பற்றாக்குறை ஏற்பட்டிருப்பது, தொழில்களின் உற்பத்தி பெருகாமைக்கு முக்கியமான காரணம். உற்பத்திக்குச் சம்பந்தமில்லாத செலவுகளுக்கு அபரிமிதமான பணம் புழங்க விடப்பட்டிருப்பதற்கு அரசாங்கத்தின் கண்ட்ரோல்களும், லைசென்ஸ் முறைகளும், எல்லாவற்றையும் தேசியமாக்கிவிட வேண்டும் என்ற கொள்கையும்தாம் அடிப்படைக் காரணங்கள்.

இவற்றின் சமஷ்டி விளைவுதான் நாட்டில் காணும் விலை உயர்வு. இதைச் சமாளிக்க மேலும் கண்ட்ரோல் முறைகளையே கையாண்டால் மேலும் உற்பத்தி குறைந்து, தேவைப் பொருள்களுக்குத் தட்டுப்பாடு தோன்றி, விலைகள் மேலும் உயரத்தான் செய்யும். அதனால் சாதாரண மக்கள் பெரிதும் பாதிக்கப்படுவார்கள். அவர்களின் வாழ்க்கை மேலும் கடினமானதாக ஆகும்.

இவ்விஷயத்தில் மேலை நாடுகளின் அநுபவம் நமக்குப் படிப்பினைபோல் அமைந்திருக்கிறது. தொழில் முன்னேற்றம் அடைந்துள்ள இங்கிலாந்து, பிரான்ஸ், நார்வே, டென்மார்க், ஸ்வீடன், பின்லாந்து, நெதர்லாந்து ஆகிய ஏழு நாடுகளில் கண்ட்ரோல்கள் விரிவாக மேற்கொள்ளப்பட்டன. இவற்றின் பலன் 1963 க்குப் பின் ஏழாண்டு காலத்தில் சாதாரண மக்களின் தேவைப் பொருள்களின் விலை 40 சதவிகிதம் முதல் 60 சதவிகிதம் வரையில் உயர்ந்தன. சென்ற 12 மாத கால அளவில்கூட 5 சதத்திலிருந்து 10 சதவீதம் வரையில் உயர்ந்துள்ளன. இதற்கு நேர்மாறாக, கண்ட்ரோல்கள் அதிகமாகச் செயல்படாத இத்தாலி, மேற்கு ஜெர்மனி, ஸ்விட்ஜர்லாந்து, கனடா, அமெரிக்கா போன்ற நாடுகளில் விலைவாசிகள் 27 சதத்திலிருந்து 35 சதவீத அளவுக்கே உயர்ந்துள்ளன. சென்ற 12 மாத காலத்தில் கனடாவில் 2.8 சதவீதமும், அமெரிக்காவில் 4.3 சதவீதமும், ஸ்விட்ஜர்லாந்தில் 6.8 சதவீதமுமே விலைவாசிகள் உயர்ந்துள்ளன.

இந்தப் புள்ளி விவரங்களை ஐரோப்பியக் கூட்டுறவு அபிவிருத்தி அமைப்பு ஸ்தாபனம் கொடுத்திருக்கிறது. இதிலிருந்து புலனாகும் உண்மை கண்ட்ரோல்களினால் விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்த முடியாது என்பதே.

இந்த அநுபவ உண்மையை இந்திய அரசாங்கம் உணருமா? அல்லது அதிகார பலமும், கட்சி பலமும் ஒன்றாகச் சேர்ந்திருப்பதால், ஏதேச்சாதிகார முறையில் அவசரச் சட்டங்கள் மூலம் மேலும் மேலும் கண்ட்ரோல் முறைகளைத்தான் மேற்கொள்ளுமா?

உடனடியாகச் செய்ய வேண்டியது ஊதாரிச் செலவுகளை எங்கெங்கெல்லாம் குறைக்க முடியுமோ, அங்கெல்லாம் குறைத்தும் சிக்கனத்தை எங்கெல்லாம் மேற்கொள்ள முடியுமோ அங்கெல்லாம் மேற்கொண்டும் பண வீக்கத்தைக் குறைத்து உற்பத்திப் பெருக்கத்துக்கு வேண்டிய சூழ்நிலையை நாட்டில் உண்டாக்க முயலுவதே. இவை ஏற்படாத வரையில் விலைவாசிகளைக் கட்டுப்படுத்துவது என்பது பகற் கனவாகவே ஆகும். விலைவாசிகள் உயரத்தான் செய்யும்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

## எல்லைப் பிரச்னை

ஓர் ஆயுத ஒப்பந்தத்தின்படி ஸவூதி அரேபியாவுக்கு அமெரிக்கா யுத்த விமானங்கள் அளித்திருந்தது. இப்போது இவற்றில் 75 விமானங்களை ஸவூதி அரேபியா, பாகிஸ்தானுக்கு வழங்கியிருப்பதாக லண்டனிலிருந்து வந்துள்ள ஒரு செய்தி தெரிவிக்கிறது!

எல்லைப் பிரச்னை பயங்கர நிலை அடைந்திருக்கிறது என்று ஸ்ரீமதி இந்திரா காந்தி கூறுகிறார். உள்நாட்டுப் பொருளாதாரப் பிரச்னையும் அதே அளவுக்குப் பயங்கரமாகியிருக்கிறது. இப்படிப்பட்ட பயங்கர நிலையில் ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு அவர்கள் மிகவும் நிலை குலைந்து போயிருப்பார். ஸ்ரீமதி இந்திரா அவ்விதம் அளவுக்கு மீறிக் கலக்கமடையாமல் தைரியமாக இருப்பதைக் கண்டு வியக்கிறேன்.

இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கு மிடையே போர் ஏற்படாதவாறு தடுக்க ராஜரீக நடவடிக்கை எடுப்பதில் ருஷியா, பிரிட்டன், பிரான்ஸ் ஆகிய நாடுகளுடன் அமெரிக்காவின் உயர் அதிகாரிகள் கலந்து ஆலோசிப்பதாக வாஷிங்டனிலிருந்து வந்துள்ள ஒரு தகவல் தெரிவிக்கிறது.

## பெருமையும் சிறுமையும்

பாரசீக சாம்ராஜ்யத்தின் இரண்டாயிரத்து ஐந்நூறாவது ஆண்டு விழா இரானில் கொண்டாடப்பட்டிருக்கிறது. பண்டைக்கால மன்னர்களின் பெருமைகளுக்கு உலக முக்கியத்துவம் தந்து விழா நடத்தியிருக்கிறார்கள்.




நமது இந்தியாவில் வெளிநாட்டிலிருந்து வரும் உல்லாசப் பயணிகளுக்கு நாம் காட்டக் கூடியதெல்லாம் பல நூற்றாண்டுகளுக்கு முன்பு ஆட்சி செய்தோரின் பெருமையையும், விவேகத்தையும், திறமையையும் காட்டும் சின்னங்களேயாகும். நம் காலத் தலைவர்களின் பெருமைக்கும், விவேகத்துக்கும், திறமைக்கும் சின்னமாக இருப்பது அரசியல் சாஸனமேயாகும். அதை நாசமாக்குவதில்தான் தில்லி சர்க்கார் தீவிரமாக முனைந்துள்ளது.

## விற்பனை வரி

1937ல் அன்றைய சென்னை மாநிலத்தில் மதுவிலக்கினால் ஏற்பட்ட நஷ்டத்தை ஈடு கட்டுவதற்காக நான் விற்பனை வரி விதித்தேன். இந்த வரிவிதிப்பின் மீது கவுன்சிலில் விவாதம் நடந்தபோது சென்னையைச் சேர்ந்த ஒரு பிரிட்டிஷ் வர்த்தகத் தலைவர் மற்ற எதிர்க் கட்சியினரோடு சேர்ந்து விற்பனை வரியைத் தடுக்கப் பாடுபட்டார். ஆயினும் விவாதம் முடியும்போது அவரே, சர்க்காருக்கு வருமானம் அவசியமாகத் தேவை எனில், ஏழை மக்களைத் தாக்கும் மது வரியை விடுத்து, எல்லா மக்களும் தருகிற விற்பனை வரியை விதிப்பதே சிலாக்கியம் என்றார்.



# ராஜாஜி - 93

அன்புள்ள கல்கி ஆசிரியருக்கு,

நான் கல்கி ஆரம்ப காலத்திலிருந்து அதன் வாசகன். கல்கியின் மூலம் ராஜாஜியின் கருத்துக்களை அறிந்து எங்கள் பிராந்தியங்களில் பிரசாரம் செய்யும் ஓர் எளிய தொண்டனும்கூட. 10-10-71 கல்கி இதழில் 'ராஜாஜி 93' என்ற ஓர் அரிய மலர் வெளியிடப் போவதாகவும் அந்தச் சமயத்தில் ஸ்வராஜ்யா வாசகர்களுக்குச் சில சலுகைகளையும் அறிவித்திருந்தீர்கள். கல்கியும் ஸ்வராஜ்யாவும் ஒரே ஸ்தாபனம் என்பதை நான் அறிவேன். அப்படியிருக்க ஸ்வராஜ்யா வாசகர்களுக்கு மட்டும் இப்படிச் சலுகைகளை அறிவித்து விட்டுக் கல்கி வாசகர்களைக் கவனிக்காமல் இருப்பது அழகா? எங்களுக்கும் 'ராஜாஜி - 93' விசேஷ மலர் பெறுவதற்கு இந்தச் சமயத்தில் கல்கி சந்தாக் கட்டுவதிலும் ஏதாவது சலுகைகளை அறிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

கொண்டையம்பேட்டை
12-10-71 — கோபாலகிருஷ்ணன்

வாராவாரம் வியாழக்கிழமை என்று விடியும் என்று காத்திருக்கும் பல்லாயிரக்கணக்கான கல்கி வாசகர்களில் நானும் ஒருவன். கல்கி வாசகன் என்றாலே 'ராஜாஜி பக்தன்' என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. 10-10-71 கல்கி இதழில் 'ராஜாஜி 93' என்ற மலர் வெளியீட்டைப் பற்றிய அறிவிப்பைப் பார்த்து ஆனந்தம் அடைந்தேன். அதில் ஸ்வராஜ்யா வாசகர்களுக்கு மட்டும் சில சலுகைகளைச் சந்தாவில் அறிவித்திருக்கிறீர்கள். 'ராஜாஜி 93' என்ற அந்தப் பாதுகாக்க வேண்டிய பொக்கிஷத்தைப் பெறவும் சில சலுகைகளை அறிவித்திருக்கிறீர்கள். ராஜாஜியின் ஒவ்வொரு எழுத்தையும் ஊன்றிப் படிக்கும் கல்கி வாசகர்களாகிய நாங்கள் என்ன பாவம் செய்தோம்? எங்களுக்கும் — கல்கி சந்தாதாரர்களுக்கும் ஏதாவது ஏற்பாடு செய்யக் கூடாதா? "ராஜாஜி 93" பொக்கிஷம் கல்கி அன்பர்கள் சிலருக்கும் கிடைக்க ஒருவழி சொல்லுங்கள்.

சிவகங்கை
15-10-71 — கோபாலன்

'ராஜாஜி 93' என்ற அற்புதக் கருத்துக் கருவூலமாக ஒரு பொக்கிஷத்தை வெளியிடப் போவதை அறிந்து பெரு மகிழ்ச்சி. அந்தச் சமயத்தில் ஸ்வராஜ்யா வாசகர்களுக்கு அறிவிக்கப்பட்டிருப்பது போலக் கல்கி சந்தாதாரர்களுக்கும் சந்தா கட்டுவதில் ஏதாவது சலுகைகள் அறிவித்தால் எம்போன்ற கல்கி வாசகர்களுக்கு எத்தனையோ மகிழ்ச்சியாக இருக்கும். ராஜாஜி 93 புத்தகத்தை நாங்கள் பெறவும் ஏதாவது ஒரு திட்டத்தை எளிய முறையில் சொன்னீர்களானால் இரட்டிப்புச் சந்தோஷமாக இருக்கும்.

பாபநாசம்
16-10-71 — அரசரசன்

அன்புள்ள ஆசிரியருக்கு,

வணக்கம். தாங்கள் 10-10-'71 இதழ் கல்கியில் 'ராஜாஜி 93' என்ற அற்புதமான ஒரு கருத்துக் களஞ்சியத்தை உருவாக்கி ராஜாஜி அன்பர்களின் கரங்களில் தவழ விடப் போவதை அறிந்தேன். அதுமட்டுமல்லாமல், அம்மலரைச் சலுகையாகவும், இலவசமாகவும் பெற ஸ்வராஜ்யா வாசகர்களுக்கு ஓர் ஏற்பாட்டையும் வகுத்துக் கொடுத்திருக்கிறீர்கள். ஏன் சார், இந்த ஓரவஞ்சனை உங்களுக்கு? இத்தனை ஆண்டுகளாக ராஜாஜியின் கருத்துக்களையெல்லாம் கல்கியின் மூலம் அறிந்து மகிழும் கல்கி அன்பர்களுக்கு ஏதாவது சந்தா கட்டுவதில் சலுகை அளிக்கக்கூடாதா? அந்த அரிய பெரிய காவியத்தை அடைய வழி சொல்லக் கூடாதா? தயவுசெய்து "கல்கி" நேயர்களிடமும் உங்கள் பாச உள்ளத்தின் நேசக் கரம் நீளட்டும்.

கோபிசெட்டிபாளையம்
16-10-71 — ஏகாம்பரம்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆



நேசத்திறுள்ள நல்லவர்கள் அனைவரது அனுதாபத்தையும் பெற்றுள்ள திரு கங்குலி அவர்களது பதவி நீக்கம் பற்றி ராஜாஜி எழுதுகிறார்:

திரு கங்குலி நமது தலைசிறந்த என்ஜினியர்களில் ஒருவர் என்று அவரிடம் பணி புரிந்த அனைவரும் என்னிடம் சொல்கிறார்கள்; அவரிடம் தாங்கள் பல விஷயங்களைக் கற்றுக் கொண்டதற்காக ஆழ்ந்த நன்றி கொண்டிருப்பதாகச் சொல்கிறார்கள். திறமைமிக்க திரு ஹனுமந்தையாவின் இலாகாவில்கூட, திரு கங்குலி பதவியிலிருந்து விலகுவதற்கு ஒரு சில மாதங்களே மீதமிருக்கும் இச்சமயத்தில் திரு கங்குலி துக்கப்படுமாறு காரணம் புரியாத ஒரு அசம்பாவிதம் நடந்திருப்பது மகா பரிதாபமாகும்.

# பால்கிவாலாவின் அறைகூவல்

சென்னை, லயோலா கல்லூரி பெர்ட்ரம் மண்டபத்தில் சென்ற 16ந் தேதியன்று "ஸெர்வண்ட்ஸ் ஆஃப் இண்டியா ஸொஸைட்டி" ஆதரவில் நடைபெற்ற பிரம்மாண்டமான பொதுக்கூட்டம் சமீப காலத்திய சென்னை நிகழ்ச்சிகளில் மிக மிக முக்கியத்துவம் வாய்ந்தது.

கூட்டத்துக்குத் தலைமை தாங்கியவர் நாட்டின் ஒப்பற்ற தலைவர் ராஜாஜி. பேச்சாளர் இந்திய உயர்நீதி மன்ற வழக்கறிஞரும் சட்ட நிபுணருமான திரு என். ஏ பால்கிவாலா. பேசிய விஷயம் லட்சோப லட்சம் சாதாரண மக்களைப் பாதிக்கும் 'அரசியல் சாஸனத் திருத்தங்களும் அவற்றின் விளைவுகளும்' என்பது. மாணவர்களும், கல்லூரி ஆசிரியர்களும், வழக்கறிஞர்களும், தொழில் வர்த்தகப் பிரமுகர்களும் பொதுமக்களும் திரளாகக் கூடி, மண்டபமே நிரம்பி வழிந்தது.

திரு பால்கிவாலாவின் பேச்சின் கவர்ச்சியே தனி. கருத்துக்களை ஆணித்தரமாகச் சொல்லுவார். நகைச்சுவை இழையோட அழகாகச் சொல்லுவார். அன்று அவர் கூறிய கருத்துக்களில் சிலவற்றைக் கீழே கொடுக்கிறோம்.

"ஜீவாதார உரிமைகள் என்பவை மக்களுக்கு அளிக்கப்பட்ட சாசுவதமான உரிமைகள். மக்களின் ஒப்பற்ற பொக்கிஷம் இவை. இதைப் பெரும்பாலான மக்கள் இன்னமும் உணரவில்லை. இதை உணர்ந்து கொள்வதுடன், இவை தங்கள் கண் முன்னாலேயே பறிபோவதைத் தெரிந்து கொண்டு, அவற்றைப் பாதுகாக்க முன்வர வேண்டும்.

"ஜீவாதார உரிமைகளைக் குறைக்கவோ, ரத்து செய்யவோ எந்தச் சட்டசபைக்கும் அதிகாரம் இல்லை. இதுதான் இந்த உரிமைகளை அரசியல் சட்டத்தில் அமைத்த மாமேதைகளின் நோக்கம். மறைந்த தலைவர்களின் கருத்தும்கூட.

"மக்கள் முன்னேற்றத்துக்கு இவை தடையாக நிற்கின்றன என்று சொல்வது சுத்தப் பொய். மக்களை இது ஏமாற்றுவதே ஆகும். எந்தவித முன்னேற்றத் திட்டத்துக்கும் சாஸனத்திலுள்ள ஜீவாதார உரிமைகள் தடையாக இருந்ததில்லை.

"முன்னேற்றம் காணப்படவில்லையானால் அதற்குக் காரணம் கொள்கைகளில் உள்ள தவறுதல்களும் திட்டங்களில் காணும் குறைபாடுகளும்தாம். ஜீவாதார உரிமைகள் அல்ல.

"மக்களிடமிருந்து பெருவாரி வோட்டு பலம் பெற்று, அவர்களிடமிருந்து அதிகாரத்தைப் பெற்றுள்ளதால், ஜீவாதார உரிமைகளை மாற்றிவிடலாம் என்று சில அரசியல் கட்சியினர் சொல்வது தவறு.

"24வது திருத்தம் மக்கள் சபையில் நிறைவேறிவிட்டது. இதன் விளைவாகப் பேச்சுச் சுதந்திரம்கூட எடுபட்டுப் போய்விடக்கூடும். மத்திய அரசு மட்டுமின்றி ஒவ்வொரு ராஜ்ய அரசாங்கமும்கூடத் தங்கள் இஷ்டம் போல், ஜீவாதார உரிமைகளைப் புறக்கணித்து அரசு நடத்திச் செல்ல முடியும். அவர்களின் நடவடிக்கைகளை எதிர்த்து எந்த நீதிமன்றத்துக்கும் போக முடியாது.

"ஜனாதிபதிகூட, எந்த மசோதாவாவது தமக்குத் தவறு என்று தோன்றினால் மறு பரிசீலனைக்கு லோக் சபைக்கு அனுப்பும் உரிமையை இனி உபயோகிக்க முடியாது போய்விடும்.

"அடிப்படை உரிமைகளைப் பறிக்க அதிகாரம் பெற்றாலும் அந்த அதிகாரத்தை துஷ்பிரயோகம் செய்ய மாட்டோம் என்று ஆளும் கட்சி அளிக்கும் உறுதி மொழிகள் நிலையானவையல்ல. நம்பக்கூடியவையுமல்ல. இந்திய மன்னர்களின் மானியத் தொகை விஷயம் அரசியல் சாஸனத்திலேயே இடம் பெற்றிருந்தது. அந்த உரிமைகளின் கதி என்னவாயிற்று!

"இப்போது 25வது திருத்தம் வரப் போகிறது. இது கொண்டு வரப்படுவதே 24வது திருத்தம் நிறைவேறியதால்தான். 25ம் திருத்தமும் நிறைவேறினால் மக்களது சொத்துரிமை பாதிக்கப்படும். சொத்துக்காகக் கொடுக்கப்படும் நஷ்டஈடும் நியாயமான தொகையாக இருக்காது. இதைப் பற்றி நீதி மன்றங்களில் முறையிடவும்கூட முடியாது.

"இது ஏதோ பணக்காரர்களைப் பற்றிய விஷயம் என்று எண்ண வேண்டாம். சாதாரண மக்கள், ஏழை மக்கள், அப்பாவி மக்களின் சொத்துக்களும் பாதிக்கப்படலாம். உங்களுடைய சேமிப்பு, உங்களுடைய குடியிருப்பு, உங்கள் பிராவிடெண்ட் ஃபண்ட் பணம் — முதலியன பாதிக்கப்படும். நஷ்டஈடாக நியாயமான மதிப்புக்குப் பதில் இஷ்டப்பட்டதைக் கொடுக்க அரசாங்கத்துக்கு இந்தத் திருத்தம்மூலம் அதிகாரம் கிடைக்கும்.

"இத்தகைய பாதகங்களை விளைவிக்கக் கூடிய திருத்தங்கள் நிறைவேறவொட்டாமல் பார்த்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு மக்களுடையதாகும். ஜனநாயகத்தில் மக்கள் விழிப்புடன் இருக்க வேண்டும்."

தலைமை வகித்த ராஜாஜி, இந்தத் திருத்தங்கள் மக்களை நோக்கியுள்ள மகத்தான அபாயங்கள், அவற்றை எதிர்த்து மக்கள் கிளர்ச்சி செய்ய வேண்டும் என்று விளக்கினார்.

"உடலுக்கு இருதயமும் நுரையீரலும் எப்படி ஆதாரமோ அப்படித்தான் அரசியல் அமைப்பில் ஜீவாதார உரிமைகள். இதைப் பலர் உணர்ந்தாலும் வெளிச் சொல்லப் பயப்படுகின்றனர். அப்படி இருக்கக் கூடாது.

"தவறானது என்பதை எடுத்துச் சொல்லவும் சரியானது என்பதைக் கூறவும், அறிஞர்கள் தைரியமாக முன்வர வேண்டும்.

"மொகலாயர் ஆட்சியிலும் பிரிட்டிஷார் ஆட்சியிலும் நமக்கு அரசியல் சட்டமும், ஆதார உரிமைகளும் இருக்கவில்லை. எனினும், நமது ஜீவாதார உரிமைகள் அவ்வளவாகப் பாதிக்கப்படவில்லை. ஆனால் ஸ்ரீமதி இந்திரா காந்தி ஆட்சியில் இவை பறிபோகும் நிலைமை தோன்றியுள்ளது. முன் எப்போதும் இராத ஆபத்து வந்திருக்கிறது" என்பதைத் தெளிவாகவும் ஆணித்தரமாகவும் எடுத்துரைத்தார் ராஜாஜி.

கூட்டம் முடிந்ததும், திரு பால்கிவாலாவுக்குக் 'கல்கி' பூங்காவில் விருந்துபசாரம் நடந்தது.

---

படங்கள் : 1. பால்கிவாலா பேசுவதைக் கவனமாகக் கேட்கிறார் ராஜாஜி. 2. ராஜாஜியும் லயோலா கல்லூரி முதல்வர் பூஜ்யர் சூரியகோஸும். 3. ராஜாஜி பேசுகிறார். 4. ராஜாஜிக்கு மாலை அணிவித்து மகிழ்பவர் ஸெர்வண்ட்ஸ் ஆஃப் இண்டியா ஸொஸைட்டி காரியதரிசி வெங்கட்ராமன். 5. பால்கிவாலா பிரசங்கம்.

# RAJAJI - 93 SOUVENIR

A collection of tributes, reminiscences and experiences from many distinguished and eminent personalities from India and abroad and profusely illustrated with pictures portraying the many events in Rajaji's long and unique life.

**With each copy of the Souvenir is given free a standard 45 RPM disc carrying**






*(Rajaji's talks are on 'God-fearing life' on one side of the disc and on 'World Government' on the other side)*

A sumptuous and high-class production with more than 300 pages in 'Life' magazine size and priced at Rs. 12/- per copy plus Rs. 1.50 to cover packing, postage and registration charges.

Only a limited number of copies are printed of the Souvenir and therefore copies are reserved in the order of remittances received at the rate of Rs. 13.50 per copy inland and Rs. 25/- per copy abroad by sea mail.

The publishers of "Rajaji-93 Souvenir" have also great pleasure in offering a complimentary copy of Rajaji-93 Souvenir along with the disc carrying the Voice of Rajaji to those who subscribe to 'Swarajva' for three years and remit Rs. 45/- in advance to the **Manager, Swarajya, Madras-31** on or before 10th December 1971 when Poojya Rajaji completes his ninety-third year.



**T. Sadasivam**

Convener, Rajaji-93 Souvenir Committee

Kalki Buildings, Chetput, Madras-31

Phone : 61034




கடமையை மறந்த வானர ராஜனுக்கு
வடமொழியில் இளையபெருமான் சொன்
னதியாதெனின் அறம்பொருள் இன்பம் மூன்றையுமழிக்கும்
மதியைக் கொல்லும் மதுபானம்.

பானாத் அர்த்தஸ்ச தர்மஸ்ச காமஸ்ச பரிஹீயதே
पानात् अर्थश्च धर्मश्च कामश्च परिहीयते।

வடக்கு தெற்கு என்பதில்லை உண்மைக்கு
வடமொழி தென்மொழி என்பதுமில்லை
அழிந்த அறிவைத் திருத்த மூளையே சாதனம். அது
அழிந்த பின் அறிவுக்கந்த வழியில்லை.
வள்ளுவர் சொன்னதிதுவே:

களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று.

சுருக்கெனக் குத்தும்படி வள்ளுவர் சொல்லுகிறார்
நீருக்குள் ஆளைத்தேடத் தீவட்டியோ விளக்கோ எப்படி உதவும்?
நீரில் அணைந்து போகுமல்லவா? என்கிறார் –
அறிவுக்கு மூளையே வழி. அது கெட்டுப் போனபின்
மூளையைக் கெடுத்துக் கொண்ட மனிதனுக்கு
அறிவு புகுத்த வழியில்லை
வழியடைப்பு உண்டாகி விடுகிறது.



# 4. பொம்மைக் கலியாணம்

மண்ணுக்குள் எவ்வுயிரும் தெய்வம் என்றால்
  மனையாளும் தெய்வமன்றோ? மதிகெட்டீரே...
காதல் செயும் மனைவியே சக்தி கண்டீர்
  கடவுள்நிலை அவளாலே எய்தவேண்டும்
—பாரதியார்: சுயசரிதை

"ஆள்காட்டி விரல் என்பது பெருமானாகிய பகவானைக் காட்டும் விரல். 'தத்' — 'அது' என்று வேதம் சுட்டிக் காட்டுகிற பொருளைத்தான் ஆள்காட்டி விரல் குறிப்பிடுகிறது. 'நான்' 'நான்' என்று தன்னையே மார்பில் குத்திக் காட்டிக் கொள்வது கட்டை விரல். கட்டை



## அம்மா

ரா. கணபதி

விரல் அளவுக்கே ஜீவாத்மாவுக்குள்ளே சித் சக்தி விளங்குகிறது என்று வேதம் சொல்கிறது. பரமாத்மாவைக் காட்டும் ஆள்காட்டி விரல், ஜீவாத்மாவைக் குறிக்கும் கட்டை விரல், இரண்டையும் சேர்த்துவிட்டால் சின் முத்திரை — இரண்டும் ஒன்றுதான் என்ற அத்வைதத்தைக் குறிக்கும் முத்திரை'' என்று ஸ்ரீ காமகோடி பெரியவாள் கூறியிருக்கிறார்.

பரமாத்மாவைக் காட்டும் அந்த விரலால்தான் தன் அகத்துக்காரரை, 'ஆள் காட்டி' விட்டாள் குழந்தை சாரதாமணி. இரண்டு கைகளையும் கோத்துக் கொண்டு காட்டியதால் அப்போதே மனம் குவிந்து அவருக்கு சர்வ சமர்ப்பண அஞ்சலியும் செலுத்தி விட்டாள் போலும்!

அவள் அந்தப் 'பைத்திய'த்தைக் காட்டியதை மற்றவர்கள் அப்போதைக்கு ரசிக்காவிட்டாலும், அதைக் குழந்தை விளையாட்டாக விரைவிலேயே மறந்து போனார்கள். கதாதரரே தம்மை மையமாக வைத்து அப்படி ஒரு விளையாட்டு நடந்ததைத் தாம் அறிந்ததாகவே காட்டிக் கொள்ளவில்லை. விளையாடிய குழந்தையும் அதை மறந்தாற் போலவே ஜயராம்பாடிக்குப் போய்ச் சேர்ந்தாள்.

* * *

ஜயராம்பாடியில் அந்த இளசான கைகளும் கால்களும் மீண்டும் உழைக்கத் தொடங்கிவிட்டன.

சாருவிடம் யாரும் 'இன்ன வேலை செய்' என்று பணிக்க வேண்டிய அவசியமே இருக்கவில்லை. தானாகவே, ஏதோ ஓர் உள்ளுணர்ச்சியில் செய்வது போல் 'பரபர' வென்று ஒன்றையெடுத்து ஒரு வேலையில் ஈடுபடுவாள் சாரதாமணி.

அம்மா 'அகத்தில் இல்லாத' சமயங்களில், சிற்றன்னையை முந்திக் கொண்டு, அந்தப் பச்சைக் குழந்தை சமையலிலும் ஈடுபடும். அடுப்பும், அதற்கு மேலிருக்கும் சோற்றுப் பானையுமாகச் சேர்ந்து ஏறக் குறைய அவளுடைய கழுத்தளவு உயரத்துக்கு வந்துவிடும். பானையில் கரண்டியை விட்டுக் கிளறுவது அந்தக் குழந்தைக்கு எத்தனை சிரமமாயிருந்திருக்கும்? பனித்துளி பரவிய கமல மலர்போல் முகத்தில் வியர்வை அரும்பக் குழந்தை எழும்பி எழும்பிப் பானையைக் கிண்டுவாள். அந்தப் பசுங் குழந்தை பருக்கையைக் கவனமாக எடுத்து வெந்துவிட்டதா என்று குட்டி விரலால் நசுக்கிக் கொட்டைக் கண்களால் பார்க்கிற காட்சி ஒரு சித்திரமாகவே அகக் கண்ணில் விரிகிறது. சோற்றுப் பானையை அடுப்பிலிருந்து இறக்குவது மட்டும் அவளால் நிச்சயம் முடியாத காரியம்.

''அப்பா, அப்பா'' என்று கூப்பிடுவாள். ராமசந்திரர் ஓடிவருவார்.

தமது அருமந்தப் பெண் யாரும் சொல்லாமலே சோறாக்கி விட்டு, வியர்வையும், கரிப் புகையுமாகப் பெருமையுடன் நிற்பதைப் பார்த்துத் தாமும் பூரிப்பார். சோற்றுப் பானையைத் தாமே அடுப்பிலிருந்து இறக்கி வைப்பார்.

''கையில் ஏதும் சுட்டுக் கொள்ளவில்லையேடி, கண்ணூ'' என்று கேட்டு அந்தத் துளிர்க் கைகளை — அயராத வேலையில் தடித்துப் போகவிருக்கும் துளிர்க் கைகளை — விரித்துப் பார்ப்பார்.

அதில் 'அன்ன ரேகை' என்று ஏதாவது ஓடிற்றோ என்னவோ? அன்னம் பாலிக்கவே வந்த அன்னை யின் கை அது.

'அன்னம்' என்றால் 'ஹம்ஸம்' என்ற அர்த்த மும் இருக்கவே இருக்கிறது. அது வேறு கதை என்கிறீர் களா? அன்பு அன்னமும் உதர அன்னமும் ஒன்றான துதான் இந்த 'அம்மா'வின் கதை.

• • •

**ப**சுக்களுக்குக் கோரைப் புல் பிடுங்குவதற்காகப் போவாள் சாரு. ஆமோதர் ஆற்றைத் தவிர, பாடுஜ்யே புகுர் என்றும், புண்ய புகுர் என்றும் ஏரிகளும் உண்டு ஜய ராம்பாடியில். ஏரிப் படுகை சொத சொதவென்றிருக்கும். அந்தச் சொத சொதப்பில் ஒருவிதமான கோரைப் புற்கள் வளமாக வளரும். பசுக்களுக்கு இந்தப் புல்லில் மிகுந்த பிரி யம். சாருவுக்குப் பசுக்களிடம் மிகுந்த பிரியம். தன் புஷ்பப் பாதங்கள் தண்ணீரில் ஊறிச் சேற்றுப் புண் உண்டாவதை



யும் பொருட் படுத்தாமல், அந்த உளையில் இறங்கிப் புல் பிடுங்குவாள் குழந்தை. நகத்தில் அழுக்குப் படாத நாசூக்குக்காரர்கள் அம்மாளின் கதையில் குறிப்பாக இந்த உழைப்பின் மகிமையைக் கவனிக்க வேண்டும். உழைப்பில் சேருகிற அழுக்கு அழுக்கே அல்ல; அது உள்ளத்தை ஸ்படிகமாக்குகிற அழுக்குநீக்கியாக்கும்!

கத்தை கத்தையாகப் புல்லை மார் போடு சேர்த்து – கோமள உடம்பிலே அந்தப் புல் படுகிறபோது ஏற்படுகிற அரிப்பையும் பொருட்படுத்தாமல்-கரையிலே கொண்டு வந்து போடுவாள்.

மறுபடியும் தண்ணீரில் இறங்குவாள். கழுத்தளவு நீர் வருகிறவரையில் சென்று விடுவாள். மீண்டும் ஒரு கத்தை கரை வந்து சேரும்.

''அடி சாரு, என்னமா அதுக்குள்ளே இத்தனை புல் கொண்டு வந்து போட்டே?'' என்று ஆச்சரியப்படுவாள் சியாமசுந்தரி.

சாரு அதற்குப் பதில் சொல்லாமல் ஓர் அழுத்தமான சிரிப்பை மட்டும் செப்பு உதடுகளில் இறுகப் புதைத்துக் கொள்வாள்.

'கவடு தெரியாத' சாருவின் இந்தச் சிரிப்பில் மட்டும் கவடு கவடு விடுக் கிறதே! 'என்ன, அழுத்தலான சிரிப்பு' என்று வியந்துகொள்வாள் சியாமா.

அந்தச் சிரிப்பிலே புதைத்துக் கொண்ட அழுத்தமான இரகசியத்தை வெகு காலத்துக்குப் பிறகுதான் அன்னை சாரதாமணி அவிழ்த்து விட்டாள். அன்னை சொல்வாள்:

''என்னால் எப்படி அவ்வளவு சீக்கிரத்தில் அவ்வளவு புல் சேகரிக்க முடிகிறது என்று மற்றவர்கள் ஆச்சரியப்பட்டனர். விஷயம் இதுதான். நான் ஒரு முறை புல் கற்றையைக் கரையில் வைத்துவிட்டு, ஏரிப் படுகைக்குள் மறுபடியும் போனேனோ இல்லையோ, உடனேயே அங்கே ஒரு பெண் இன்னொரு கற்றைப் புல்லை என் கையில் திணிப்பாள். அந்தப் பெண் எப்படி இருப்பாள் தெரியுமா? அசல் என் அச்சாகவே இருப்பாள்! புல் பிடுங்குவதில் மட்டுமின்றி எல்லாக் காரியத்திலும் அவள் எனக்கு உதவி செய்வாள். குழந்தைப் பருவம் முழுவதும் அவள் அனவரதமும் என்னுடனேயே இருந்தாள், வேலை செய்தாள், விளையாடினாள், ஆடிப் பாடினாள். அசலார் யாராவது வருகிற அரவம் கேட்டால் உடனே அந்தர்தானமாகி விடுவாள்.''

இப்போது தெரிகிறதா, கவடற்ற சாரு எத்தனை ரகசியங்களை ஒளித்துக் கொண்டு கவடு செய்தது என்று?

சாரதையுடனே தத்ரூபம் அவளாகவே இருந்து உதவி செய்தது அம்பிகையின் சேடிகளில் ஒருத்தி; அம்பிகை உலகுக்கு வந்தவுடன் அந்தச் சேடியும் பணி புரிய உடன் வந்தாள் என்று சாதுக்கள் விளக்கம் தருகிறார்கள்.

* * *

**சா**ரதாமணிக்குத் தம்பி, தங்கைகள் பிறந்தார்கள். 'சமர்த்து, தலைச்சனைப் பெண்ணாகப் பெற்றுக் கொண்டாள்' என்ற பொது வழக்கு சியாமசுந்தரியின் விஷயத்தில் நூற்றுக்கு நூற்றிருபது சதவிகிதம் மெய்யாயிற்று. 'முன்னண்ணை'க் குழந்தையான சாரு தம்பி, தங்கைகளைச் சவரணையாகப் பார்த்துக் கொண்டாள். குழந்தைக் காரியம் என்பது மிகவும் சள்ளை பிடித்த ஒன்று. குழந்தையிடம் இருக்கிற மாதுரியத்தினாலேயே இந்தத் தொல்லையைத் தாயால் ஏற்க முடிகிறது. இங்கோ அந்தக் குழந்தைகளின் மாதுரியத்தை விடக் குழந்தைகளுக்குத் தொண்டு செய்த சாரதையின் மாதுரியம் பெரிதாக இருந்தது.

குழந்தைகளைக் கவனித்துக் கொண்டதோடு, சிற்றப்பாக்களுக்கும் உரிய பணிவிடைகளைத் தவறாது செய்வாள். அது அவிபக்த குடும்பம் என்றும், ராமசந்திரரின் சோதரர்கள் அவருடனேயே வாழ்ந்தனர் என்றும் முன்னமே கண்டிருக்கிறோம் அல்லவா? 'சிறிய தந்தை' என்பவரை வாஸ்தவத்திலேயே தந்தைக்கு அடுத்தபடியாகக் கருதித் தொண்டு செய்தாள் குழந்தை. இதைப் பற்றிப் பிற்காலத்தில் தூய அன்னை குறிப்பிடுகையில், ''நான் என் சித்தப்பாக்களுக்கு மனசு வித்தியாசமில்லாமல் சுசுரூஷை செய்த மாதிரி, இந்தக் காலத்துப் பெண்கள் செய்வார்களா என்பது சந்தேகம்'' என்பாள்.

'இந்தக் காலத்துப் பெண்கள்' என்று அவள் குறிப்பிட்ட காலத்துக்குப் பிறகு நாலைந்து தலைமுறைகள் ஓடிவிட்டன. உறவு உணர்ச்சியும் அடியோடு போய் விட்டது!

* * *

**சா**ரு பஞ்சு நூற்கும்போது, அதன் துகம்புகள் தலையிலிருந்து கால்வரையில் ஒட்டிக் கொள்ளும். 'நகக் நகக்' என்று சின்ன நாசி தும்மும். நெல் குத்துகிற இடத்தில் கிளறிக் கொடுக்கும்போது தவிடும் உமியும் சிறிய

ரூபத்தை அபிஷேகம் செய்யும். தானியத்திலிருந்து சிறு பூச்சிகள் கிளம்பிக் குழந்தையை மொய்த்துக் கொள்ளும். அடுக்களையின் கழிவு நீரில் பாவாடை நனைந்து கனமாக ஒட்டிக் கொள்ளும். புல் பிடுங்கும் இடத்தில் சேறு தெறித்து உடம்பெல்லாம் வறவறவென்று பிடித்துக் கொள்ளும். இத்தனை அழுக்கினிடை புது மலராக மனத்தை வைத்துக் கொண்டு, அன்பு மணம் வீசிக்கொண்டு வளர்ந்தாள் குழந்தை சாரு. 'ஒரு குழந்தை செய்யிற காரியமாவா இருக்கு? கலியாணம் பண்ணிக் கொடுத்தா நறுவிசா ஒரு குடும்பத்தையே மேய்ச்சுக் கட்டிடுவா போலிருக்கு' என்று ஊர் வியந்து பேசிற்று.

* * *

கலியாணப் பேச்சும் வந்தது.

அப்போது சாருவுக்கு வயசு ஐந்தரை.

காமார்புகுரிலிருந்து பெண் பேச வந்திருக்கிறார்கள்.

ஆம், சாக்ஷாத் கதாதர சட்டர்ஜியின் வீட்டிலிருந்தேதான்!

காமமகற்றிய தூயரான கதாதரருக்கு எப்படிக் கலியாணம் பேசினார்கள்; அவருக்குத் தெரியாமலே இப்படிச் செய்து விட்டார்களா, என்று எண்ணலாம்.

உண்மை இதற்கு நேர்மாறானது. சாக்ஷாத் கதாதரரேதான் இந்தப் பெண்ணைத் தமக்குப் பேசுவதற்காக அனுப்பி வைத்தார்.

பக்தி பரவசத்தில் ஜொலித்த உள்ளத்துடனும், அந்தப் பரவசத்தைத் தாங்க முடியாமல் இளைத்துப் போன பாஞ்ச பௌதிக உடலுடனும் காமார் புகுருக்கு வந்து சேர்ந்தார் கதாதரர். பிள்ளையின் ஆவேசத்தைச் சந்திரமணியால் புரிந்து கொள்ள முடியவில்லை. 'ஊரெல்லாம் பைத்தியம் என்று சொல்கிறதே. உண்மையிலேயே இவனுக்குப் பைத்தியம்தானோ?' என்று தவியாய்த் தவித்தது தாயுள்ளம்.

''அம்மா, அம்மா'' என்று அலறுவார் கதாதரர்.

விழுந்தடித்துக் கொண்டு அவரிடம் ஓடிவருவாள் சந்திரா தேவி.

''அம்மா வந்திருக்கேன்டா, கதாயீ'' என்று அருகே அமர்வாள்.

அவளையே மலங்க மலங்கப் பார்ப்பார் கதாதரர். ''நீ.... நீயா அம்மா? ஆமாம், நீயும் அம்மாதான், எல்லாரும் அம்மாதான்.

யாதேவீ ஸர்வ பூதேஷு
மாத்ரு ரூபேண ஸம்ஸ்திதா''

என்று சொல்லிக் கொண்டே அப்படியே ஜகன்மாதாவின் அருட்சுழலில் சிக்கி, சொக்கிவிடுவார், கதாதரர்.

சந்திரமணி வைத்தியர்களை வரவழைத்தாள். வைத்தியத்துக்கு அடங்கவில்லை அந்த அதிசய 'பைத்தியம்'. அப்புறம் மந்திரவாதிகளை வரவழைத்தாள். அவர்களது உச்சாடனத்துக்குப் பயந்து ஓடவில்லை, அந்த அற்புதப் 'பேய்'. மருத்துவரும், மாந்திரிகரும் படுத்திய பாட்டையெல்லாம் பொறுமையாக ஏற்றுக் கொண்டார் கதாதரர்.

திடீரென்று வியாதி சமனமாயிற்று. பேய் ஓடிவிட்டது. கதாதரர் பரம சாந்தமானார். அவரது மகா பெரிய அம்மா அவருடைய உடலில் ஒவ்வோர் அணுவுக்குள்ளும், அவரது ரத்தத்தின் ஒவ்வொரு துளிக்குள்ளும், அவரது உள்ளத்தின் இண்டு இடுக்குகளிலெல்லாம் அன்பு மயமாகத் தன்னை அலர்த்திக் கொண்டு விட்டாள் போலும். எனவே அம்மாவை எங்கோ வெளியே தேடி அலற வேண்டிய அவசியமே அவருக்கு இல்லை.

பிள்ளை சிறிது அடங்கி யிருக்கிற இந்தச் சமயத்தில் சந்திரமணிக்கு ஒரு யோசனை தோன்றியது. கதாதரருக்குத் தெரியாமலே மூத்த பிள்ளை ராமேசுவரருடன் ஆலோசனை செய்தாள். இருவரும் ஒரு முடிவுக்கு வந்தனர். கதாயி கொஞ்சம் 'சமர்த்தாக'த் தொடங்கியிருக்கும்போதே அவருக்கு ஒரு கலியாணத்தைச் செய்துவிட்டால், அவரது சித்தத்தை உலகத்திலேயே இழுத்து வைக்கலாம் என்பதுதான் அந்த முடிவு.

கதாயிக்குத் தெரியாமலே திருமணத்தை நிச்சயம் செய்து விட்டு, முகூர்த்தம் வைத்தான பிறகு அவரிடம் சொல்லிக் கொள்ளலாம் என்று தாயும் மகனுமாகச் 'சூழ்ச்சி' செய்தார்கள்.

ஆனால், ஏனோ கதாதரருக்கு ஒரு பெண்ணாவது குதிரவில்லை. இதற்கு இரண்டு காரணங்கள் சொல்லலாம். ஒன்று, கதாயியின் 'பைத்தியம்' பற்றி வெளி உலகு ஓரளவு அறிந்திருந்தது. இரண்டாவது, வங்கத்துப் பிராமணர்கள் பெண்களுக்கு எதிர் ஜாமீன் தருவது வழக்கம். வசதியற்ற சந்திரமணியால் கணிசமான வரதக்ஷிணை கொடுக்க இயலாததால் பெண் வீட்டார் அவர்களுடன் சம்பந்தம் செய்து கொள்ள முன்வரவில்லை. ■



இந்த இரண்டுக்கும் மேலாக அம்பாளுடைய சங்கற்பம் என்ற மூன்றாவது காரணம் — அல்லது அதுதான் முழு முதற் காரணம் — இருந்தது.

"யாதேவி ஸர்வ பூதேஷு மாத்ரு ரூபேண ஸம்ஸ்திதா" என்று அம்பாவிடம் சிரித்துப் பாடினார் கதாயி.

அம்பாளும் பதிலுக்குச் சிரித்துப் பாடினாள்:

"பத்னீம் மனோரமாம் தேஹி
மனோ வ்ருத்தானுஸாரிணீம்!
தாரிணீம் துர்கஸம்ஸார ஸாகரஸ்ய
குலோத்பவாம்!!"

அம்மா பிள்ளை இரண்டு பேரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

'எல்லா உயிர்களிடமும் (ஸர்வ பூதேஷு) அன்னையாகத் திகழுபவள் தேவி' என்கிறது துர்கா ஸப்த சதி. அதே ஸப்த சதியின் பூர்வ பாகத்தில் தான் 'பத்னீம் மனோரமாம் தேஹி' என்ற சுலோகமும் உள்ளது.

"உள்ளத்துக்கு உகப்பான மனைவியை எனக்களிப்பாய். அவள் நற்குலத்தில் உதித்தவளாக இருக்கவேண்டும். என் மனத்தின் போக்கையே அனுசரிப்பவளாய் இருக்க வேண்டும். என்னை சம்ஸாரம் என்கிற துக்க ஸாகரத்திலிருந்து கடத்துவிப்பவளாக இருக்க வேண்டும்" என்பது அந்த சுலோகத்தின் அர்த்தம். சம்ஸாரத்திலிருந்து கடத்துவிப்பவளே பவதாரிணி.

சாதாரணமாக மனைவி என்பவள் தான் ஒருவனை சம்ஸாரத்தில் ஆழப் புதைப்பவள். ஆனால் 'ஸர்வ பூதேஷு' உள்ள தேவியை மனைவியினுள்ளும் பார்த்து, மனைவியையே பவதாரிணியாக்கிக்கொண்டு, சம்ஸாரத்திலிருந்து விடுதலை பெறவும் முடியும் — இப்படிப்பட்ட மனைவியை அளிக்குமாறு தேவியிடம் பக்தன் கோருகிறான் 'ஸப்த சதி'யில். ஆனால் இதுவரை புராண இதிகாசங்களில் இந்த வரத்தை மெய்யாலுமே அம்பாளிடம் எந்த பக்தனும் கேட்டுப் பெற்றதாக விருத்தாந்தம் இல்லை. பூர்வத்தில் என்றுமே காணாத இந்த அற்புதத்தை கதாதாரர்தான் செய்து காட்ட வேண்டும் என்பது அம்பாளின் சங்கற்பமாயிருந்தது.

இந்த அற்புதம் செய்வதற்கு கதாதரர் ஒருவர் மட்டுமே போதாது. சித்திரம் எழுதச் சுவர் ஒன்று வேண்டுமே! தாளம் போட இரண்டு கைகள் வேண்டுமே! கதாதரரின் அற்புத பிரமச்சரியத்துக்கும் துறவுக்கும் தாய்ச் சுவராக நிற்க ஒரு பெண் வேண்டும். அவரது ஆத்ம சங்கீதத்துக்குத் தாளம் போட அவருக்கு இன்னொருத்தி கை கொடுக்க வேண்டும்.

அப்படிப்பட்ட ஒருத்தியை, சாதாரண லௌகிகக் கலியாணத்தையே எண்ணிய சந்திரா தேவியும் ராமேசுவரரும் கண்டு பிடித்துவிட முடியுமா?

அம்பாளே அந்தப் பெண்ணின் இருப்பிடத்தை கதாயிக்குத் தெரிவித்தாள்.

* * *

ஒரு நாள் சந்திரமணியும் ராமேசுவரரும் தங்களது விவாகப் பிரயத்தனங்கள் தோற்றே வருவது பற்றி விசனித்துக் கசமுசவென்று பேசிக் கொண்டிருந்தார்கள்.

உள்ளேயிருந்து கதாதரர் புன்னகை வழியும் பொன் முகத்துடன் வெளி வந்தார்.

"ஏன் கிடந்து அலட்டிக்கொள்கிறீர்கள்? எனக்கான அகமுடையாள் ஜயராம்பாடியில் ராமசந்திர முகர்ஜியின் வீட்டில் வைக்கோல் துரும்பைச் சுற்றிக்கொண்டு காத்திருக்கிறாள். அங்கே போங்கள்" என்றார்.

வங்கத்தில் வெள்ளரி முதலிய பழங்களில் செழுமையாக வளருவதை பகவானுக்கு அர்ப்பணம் செய்வார்கள். அப்படிப்பட்ட பழங்களைக் கொடியிலேயே அடையாளம் தெரிந்து கொள்வதற்காக அதன் மீது ஒரு வைக்கோல் துரும்பைச் சுற்றி வைப்பார்கள். இவ்விதமே சாரதையை கதாதரருக்கென வைக்கோலைச் சுற்றி வைத்திருந்தாளாம் அம்பிகை!

சந்திரமணிக்கும் ராமேசுவரருக்கும் சந்தோஷம் தாங்க முடியவில்லை. கலியாணத்துக்குப் பிள்ளை சம்மதிப்பதே சந்தேகம் என்று அவர்கள் பயந்து வந்த போது, அந்தப் பிள்ளையே பெண்ணின் வீட்டை அடையாளம் சொல்லி விட்டதே!

* * *

பெண் பேசப் போனார்கள்.

விந்தையைப் பாருங்கள்! கதாயியின் பைத்தியத்தைப் பற்றி ராமசந்திரர் ஓர் ஆட்சேபணையும் எழுப்பவில்லை. முந்நூறே ரூபாய்தான் வரதக்ஷிணை தரப்படும் என்பதற்கும் ஆட்சேபிக்கவில்லை. இவற்றுக்கெல்லாம் மேலாக அவரது அருமந்தப் பெண்ணுக்கு அப்போது வயசு அஞ்சரை தான்; கதாயிக்கோ வயசு இருபத்தி மூன்று. இருவருக்குமிடையே



பதினெட்டு பிராயம் வித்தியாசம் இருந்ததையும் அவர் பொருட்படுத்தவில்லை.

இதில் அம்பாளின் திருக்கரம் வேலை செய்கிறது என்று அந்தப் புண்ணியாத்மா மோப்பம் பிடித்திருப்பார் போலும்! திருமணத்துக்கு இசைவு தந்து விட்டார்.

* * *

**1859**-ம் வருடம் மே மாதம். சௌபாக்கியவதி சாரதாமணிக்கும், சிரஞ்சீவி கதாதர சட்டோபாத்தியாவுக்கும் 'ஈசுவர கிருபையை முன்னிட்டு, பெரியோர்கள் நிச்சயித்தபடி' விவாக சுபமுகூர்த்தம் நடந்தேறியது. உலகம் முழுவதற்கும் ஈசுவரி கிருபை பொழிய உத்தேசித்து இந்த அற்புதத் திருமணத்தை நிச்சயித்திருந்தாள்.

ஏழை வீட்டுக் கலியாணமாக, வெகு அடக்கமாக நடந்தது உலகுக்கு ஒரு புதுயுகம் தொடங்கி வைத்த அந்த விவாகம். பிள்ளை வீட்டிலிருந்து கதாதரர், ராமேசுவரர் ஆகிய இருவரும் தான் வந்திருந்தனர். ஆனால் ஊர் பெண்டுகள் அருமைச் சாருவின் கலியாணத்துக்குத் திரளாக வந்திருந்தனர்.

விவாக மந்திரங்கள் ஆத்மிகத்தையும் லௌகிகத்தையும் பாவும் ஊடுமாகப் பிணைப்பவை. இதுவோ லௌகிகக் கலப்பே இல்லாத விவாகம். தன் மனைவியுடன் பௌதிகச் சேர்க்கை கொண்டு புத்திர சம்பத்தை விருத்தி செய்வது பற்றிப் பல மந்திரங்களை ஓதுவான் மணமகன். இந்த மந்திரப் பொருளை நடைமுறையாக்குவதற்கு உறுதிகொள்ளவே முதலில் கங்கணம் கட்டிக் கொள்கிறான். 'கங்கணம் கட்டிக்கொண்டு' ஒரு காரியத்தில் இறங்குவது என்றாலே முழு மூச்சுடன் அதில் ஈடுபடுவது என்று பொது வழக்கில் அர்த்தமாகிவிட்டதே!

கதாதரர் எப்படி இந்த மந்திரங்களைக் கூற முடியும்? சத்தியத்தில் தோய்ந்த அவர், வேத மந்திரங்களை அக்னி முகத்தில் பொய்யாக மொழிய முடியுமா? பின் எப்படி அவர் கங்கணத்தைக் கட்டிக் கொண்டு நிம்மதியாக அமர்ந்திருக்கிறார்?

கதாயி சிரிப்பாகச் சிரித்தார். பக்கத்திலேயே குழந்தை சாரு 'தஸா புஸா' என்று புடவையைச் சுற்றிக் கொண்டு, மாமியார் அனுப்பி வைத்திருந்த கூடை நகைகளைக் குலுங்க அணிந்து கொண்டு அமர்ந்திருந்தது.

நேற்று வரை பொம்மைக் கலியாணம் செய்து விளையாடிய அந்தப் பெண்ணே இப்போது கலியாணப் பெண்ணாக, தந்தப் பொம்மை போல் அமர்ந்திருந்தது. ஆமாம், அம்பாள் இஷ்டப்படி விளையாடட்டும் என்று தங்களை அவளது கைப்பொம்மைகளாகவே ஆக்கிக் கொண்ட தம்பதியல்லவா இவர்கள்?

கதாயி சிரிக்கிறார் — கைக் கங்கணத்தைப் பார்த்து.

சுமங்கலிப் பெண்கள் தீபக் குச்சிகளை ஏற்றிக் கொண்டு புது மணத் தம்பதியைச் சுற்றி வருகிறார்கள்.

அதில் ஒரு குச்சியிலிருந்து சுடர்கள் பறக்கின்றன!

பறந்து வந்து நேரே கதாயியின் கங்கண நூலில் தெறிக்கின்றன. அந்தச் சரடு கிறுகிறு வென்று பற்றிக் கொண்டு எரிகிறது.

கதாயி விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டே கங்கணத்தைச் சிறுகச் சிறுக அவிழ்க்கிறார்; தீயும் பையப் பையப் பரவிச் சரடு முழுதும் பொசுங்குகிறது!

அந்தக் கலியாணத்தைத் தன் உத்தேசப்படியே புதிய விதத்தில் நிறைவேற்றி விடுவது என்று தேவி பராசக்தி 'கங்கணம் கட்டிக்' கொண்டு விட்டாள்!

(தொடரும்)

## கல்கத்தாவில் நடந்தது ...!

சமீபத்தில் கல்கத்தாவில் உள்ள 'எம்ப்ளாயீஸ் ஸ்டேட் இன்ஷூரன்ஸ்' அலுவலகத்தில் நடந்த சம்பவம் இது. அங்கு வேலை பார்ப்பவர்கள் தினமும் காலையில் குறித்த நேரத்துக்கு வராமல் மிகவும் தாமதமாக வந்துகொண்டிருந்தார்கள். இதைத் தடுப்பதற்காக நகரிலுள்ள சமூகநல சங்கம் ஒன்று முயற்சி எடுத்தது. (மாணவர்களால் நடத்தப்படும் சங்கம் அது.) திடீரென்று ஒரு நாள் காலை 10 மணிக்குச் சங்கத்தைச் சேர்ந்த மாணவர்கள் பலர் அந்த ஆபீசுக்குள் நுழைந்து அங்குள்ள நாற்காலிகளில் அமர்ந்து வேலைசெய்ய ஆரம்பித்துவிட்டனர். வழக்கம்போல் 11-30 மணிக்கு அந்த அலுவலக ஊழியர்கள் சாவகாசமாக வந்தபோது எல்லோருடைய நாற்காலிகளிலும் மாணவர்கள் உட்கார்ந்திருப்பதைப் பார்த்துப் பிரமித்து விட்டார்கள். மாணவர் தலைவர் அவர்களிடம் கூறியது: "இந்த முறை இதோடு விட்டு விடுகிறோம். இனிமேல் நீங்கள் இந்த மாதிரி தாமதமாக வந்தால் நாங்கள் நிரந்தரமாக உங்கள் நாற்காலிகளில் உட்கார்ந்துவிடுவோம். உண்மையாக வேலை செய்ய விரும்பும் பலருக்கு உங்கள் இடங்கள் கிடைக்கட்டும்."



ஆதாரம்: 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்'
தகவல்: சரோஜா ராமச்சந்திரன்

இதயத்தில் ஓர் இடம்

'டெரீன்'

# லக்ஷ்மீஸ்

## கோல்டு கிரவுன்

## காட்டன் ஷர்ட்டிங்குகள்



கோல்டு கிரவுன்
ஷர்ட்டிங்குகள் உங்களைச்
சுற்றிலும் ஒரு புது
உலகைப் படைக்கிறது.

தி லக்ஷ்மி மில்ஸ்
கம்பெனி லிமிடெட்,
கோயம்புத்தூர்.

Criterion LM 2629 A



# எள்ளும் தண்ணீரும்—எங்கே போயின?

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

தேவ காரியங்களைச் செய்வது போலவே பித்ருக்களான தாய் தந்தையருக்கும் மூதாதைகளுக்கும் நமது கடமைகளை எல்லோரும் அவசியம் செய்தாக வேண்டும். தாய் தந்தையர் ஜீவியவந்தர்களாக இருக்கையில் அவர்களிடம் பணிவுடன் நடந்து கொண்டு, அவர்களுக்கு நம்மால் இயன்ற சௌக்கியமெல்லாம் செய்து தரவேண்டும். தாய் தந்தையர் நமக்காக ஆதியில் செய்துள்ள தியாகங்களுக்கு நாம் பிரதியே செய்ய முடியாது. அவர்களது மனம் கோணாமல் அவர்களை வைத்துக் காக்க வேண்டும்.

அவர்கள் இந்த உலகத்தைவிட்டுப் போன பிற்பாடும், அவர்களுக்காக சாஸ்திரப் பிரகாரம் தர்ப்பணம், சிராத்தம் (திதி) இவற்றை அனைவரும் தவறாமல் செய்ய வேண்டும்.

பெற்றோர் உயிரோடு இருக்கும் வரையில் அவர்களை வைத்துப் பராமரிக்க வேண்டும் என்பதைச் 'சீர்திருத்த'க்காரரும் ஒப்புக் கொள்கிறார். ஆனால் அவர்கள் மரணமடைந்த பின் பித்ரு காரியம் செய்வது அவர்களுக்குப் பரிகாசமாக இருக்கிறது.

'எள், தர்ப்பண ஜலம், பிண்டம், அரிசி, வாழைக்காய், சாப்பாடு எல்லாம் இங்கேயே இருக்கின்றன; அல்லது கண் முன்னாலேயே ஒருத்தன் எடுத்துப் போகிறான், அல்லது சாப்பிட்டுவிட்டான். பிதிரர்கள் எங்கேயோ மறு ஜன்மா எடுத்துவிட்டார்கள் என்று நீரே சொல்கிறீர். அப்படியிருக்க இங்கே உள்ள வஸ்து அங்கே போய் அவர்களைச் சேருகிறது என்பது பைத்தியக்காரத்தனம் அல்லவா?' என்று சீர்திருத்தக்காரர் கேட்கிறார். அவர் வாய்விட்டுக் கேட்கிறார்; உங்களில் பலருக்கும் மனசுக்குள் இப்படிச் சந்தேகம் இருக்கும்.

உங்களுக்கு ஒரு கதை சொல்கிறேன்:

ஒருவர் பையனைப் பட்டணத்தில் படிக்க வைத்திருந்தார். அவன் பரீட்சைக்குப் பணம் கட்ட வேண்டியிருந்தது. அதுவும் மறுநாளே கட்ட வேண்டியிருந்தது. உடனே அப்பாவுக்கு, 'தந்தி மணியார்டரில் பணம் அனுப்பு' என்று எழுதினான். அப்பாவுக்குத் தந்தியும் மணியார்டரும் தனித் தனியாகத் தெரியும். பிள்ளையோ 'தந்தி மணியார்டர்' அனுப்பும்படி எழுதியிருந்தான். அப்பா தபாலாபீஸுக்குப் போனார். ரூபாயைக் கொடுத்துவிட்டுத் தந்திமணியார்டர் பண்ண வேண்டும் என்றார். அவர் தபாலாபீஸ் குமாஸ்தா ரூபாயில் ஓட்டை பண்ணித் தந்திக் கம்பியில் கட்டி அனுப்புவார் என்று எண்ணினார். ஆனால் பணம் வாங்கிக் கொண்ட குமாஸ்தா ரசீது கொடுத்துவிட்டு, ''சரி. உம்முடைய பணம் சேர்ந்துவிடும். அனுப்பியாகிவிட்டது'' என்றார். குமாஸ்தா பணத்தை வாங்கிப் பெட்டியில் போட்டதையும், ஓட்டை பண்ணிக் கம்பியில் கோக்காமலிருப்பதையும் பார்த்த அப்பாக்காரர், ''என் பணம் இங்கே தானே இருக்கிறது? அதில் ஓட்டை ஒன்றும் போட்டு அனுப்பவில்லையே! அது எப்படிப் போய்ச் சேரும்?'' என்று கேட்டார். ''அது போய்ச் சேர்ந்துவிடும்'' என்று மறுபடியும் குமாஸ்தா சொன்னார். 'கட்டுக் கடகட' என்று தந்தியும் அடித்தார். ''ஏதோ லொட்டு லொட்டென்று சப்தம் பண்ணுகிறான். சேர்ந்துவிடும் என்று சொல்லுகிறான். ரூபாய் இங்கேயே இருக்கிறது. லொட்டு லொட்டென்று கட்டையை இங்கே அடித்தால் அங்கே எப்படிப் போய்ச் சேரும்?'' என்று அப்பாவுக்குச் சந்தேகம் வந்துவிட்டது.

ஆனாலும் பணம் போய்ச் சேர்ந்துவிட்டது.

அந்த மாதிரியே ஆகும் தர்ப்பணம் முதலியன பண்ணுவதும். நாம் எதைக் கொடுத்தாலும் சட்டப்படி கொடுக்க வேண்டும். சாஸ்திரம் என்கிற சட்டம் விதித்தபடி நாம் கொடுப்பதைத் தெரிந்து கொள்ளுகிற பிதுர் தேவதைகள் யாருக்கு அது போய்ச் சேரவேண்டுமோ அவர்களுக்குச் சேர்த்துவிடுவார்கள். பிதுருக்கள் மாடாகப் பிறந்திருந்தால் வைக்கோலாகப்போட்டுவிடுவார்கள்; குதிரையாகப் பிறந்திருந்தால் புல்லாக்கிப் போடுவார்கள். பிதிர் தேவதைகளுக்குப் பரமேசுவரன் இப்படி உத்தரவு பண்ணியிருக்கிறார். ஆகையால் சிராத்தந்தன்று கொடுப்பதைப் பெற்றுக் கொள்ள நேரில் அப்பா வரவேண்டியதில்லை.

தந்தி மணியார்டர் செய்தவனுடைய பணமே நேராக வாங்கிக் கொள்ளுகிறவனிடம் போவதில்லையல்லவா? மணியார்டர் பெறுகிறவன் வேறு தேசத்தில் இருந்தால் அங்கே நம் ரூபாய் நோட்டு செல்லவே செல்லாது. இங்கே ரூபாயைக் கட்டினாலும் வெளி தேசத்தில் டாலராகவோ பவுனாகவோ மாற்றித் தரவும் ஏற்பாடு இருக்கிறது. ஆனால் நம் ஊரில் டாலரையோ பவுனையோ கட்ட முடியாது. இங்கே செல்லுபடியாகிற ரூபாயைத்தான் ஏற்றுக் கொள்ளுவார்கள். அப்படியே சாஸ்திரப் பிரகாரம் விதிக்கப்பட்ட எள், தண்ணீர், வாழைக்காய் இதுகளை இங்கே தந்தால், பிதிருக்கள் இருக்குமிடத்தில் அவர்களுக்கு ஏற்ற உணவாக மாற்றித் தரப்படும்.

பிதிருக்களிடம் நமக்குள்ள நன்றி மனோபாவமும், சாஸ்திரத்தில் நமக்குள்ள சிரத்தையுமே முக்கியம். டீ பார்ட்டியில், ''இன்னொருவனுடைய ஆரோக்கியத்துக்காக நான் 'டோஸ்ட்' சாப்பிடுகிறேன்'' என்று வெள்ளைக்காரர்களும் வேறொருவன் பேரைச் சொல்லிக் கொண்டு தாங்களே போஜனம் செய்கிறார்கள். தங்களுடைய மனோபாவத்தின் சக்தியால் இன்னொருக்கு ஆரோக்கியம் உண்டாகும் என்று நம்பி அப்படிச் செய்கிறார்கள். சிராத்தம் என்பதற்குச் சிரத்தையோடு பண்ணுவது என்பது அர்த்தம். சிரத்தை நமக்கு முக்கியம். ஒரு காரியம் என்று பண்ண ஆரம்பித்தால் அதற்குரிய சட்டப்படிதான் பண்ண வேண்டும். லெட்டர் எழுதினால், ''இப்படித்தான் அட்ரஸ் எழுதுவேன். அந்தத் தபால் பெட்டியில் போடுவானேன்? எங்களகத்தில் அதைவிட நல்ல பெட்டி செய்து அதில் போடுகிறேன்'' என்று சொல்லலாமா? காரியமில்லாத மனோபாவமாக இருக்கிற வரையில் அன்பு, பக்தி, ஞானம் இவற்றைக் கட்டுப்பாடின்றி செலுத்தலாம். காரியம் செய்கையில் அதற்காக ஏற்பட்ட விதியை விடவே கூடாது.

### அத்தியாயம் அறுபத்தெட்டு
## “ஒரு நாள் இளவரசர்”

சேந்தன் அமுதனின் கட்டிலுக்கு அடியிலிருந்து வந்த முனகல் சத்தத்தைக் கேட்டதும், ஆழ்வார்க்கடியான், ''ஆகா! அப்படியா சமாசாரம்? சிவ பக்த சிகாமணிகளே! பழைய பரமசிவனைப் போல மோசம் செய்ய ஆரம்பித்து விட்டீர்களா?'' என்று சொல்லிக் கொண்டே மேலே போகத் தொடங்கினான்.

பூங்குழலி தன் இடையில் செருகியிருந்த கத்தியைச் சட்டென்று எடுத்துக் காட்டி, ''வைஷ்ணவனே! சிவபெருமானைப் பழித்த பாதகனாகிய நீ இந்த உலகில் இனி ஒரு கணமும் இருக்கலாகாது. மேலே ஓர் அடி எடுத்து வைத்தாயானால், உடனே வைகுண்டம் போய்ச் சேருவாய்!'' என்றாள்.

''தாயே! மகா சக்தி! உன்னுடைய வார்த்தைக்கு மறு வார்த்தை உண்டா? வைகுண்டப் பதவி கிடைப்பது எளிதன்று. உன் கையால் என்னை அங்கே அனுப்பி விட்டாயானால் அதைக் காட்டிலும் பெரிய பாக்கியம் எனக்கு வேறு என்ன கிடைக்கக் கூடும்?'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

இச்சமயத்தில் சேந்தன் அமுதன் கட்டிலிலிருந்து எழுந்து வந்து, ''பூங்குழலி! வேண்டாம்! கத்தியை இடுப்பில் செருகிக்கொள்! இந்த வைஷ்ணவன் சிவனைத் தூஷித்ததினால் சிவபெருமானுக்குக் குறைவு ஒன்றும் வந்து விடாது. தீய வழியினால் நல்லது ஏற்படாது. பொய்ம்மையினாலும் மோசத்தினாலும் நன்மை எதுவும் கிட்டாது. இந்த




வைஷ்ணவனிடம் உண்மையைச் சொல்லி உதவி கேட்போம். இவனும் வந்தியத்தேவனுக்குச் சிநேகிதன் தானே!'' என்றான்.

''அப்படி வாருங்கள் வழிக்கு! கபட நாடக சூத்திரதாரியான கிருஷ்ண பரமாத்மாவின் அடியார்க்கு அடியேனைக் கேவலம் சிவபக்தர்களால் ஏமாற்ற முடியுமா? கருணாமூர்த்தியான ஸ்ரீமந் நாராயணனைச் சரணாகதி என்று அடைந்தால்

அவர் அவசியம் காப்பாற்றி அருளுவார். ஆதிமூலமே என்று கதறிய கஜேந்திரனை முதலை வாயிலிருந்து காப்பாற்றிய பெருமான் அல்லவோ எங்கள் திருமால்?...''

''ஆமாம், ஆமாம்! உங்கள் திருமால் வைகுண்டத்திலிருந்து வந்து சேருவதற்குள் உங்கள் சிநேகிதர் இந்த மண்ணுலகிலிருந்தே போய்விடுவார்!'' என்று பூங்குழலி சொல்லி விட்டுக் கட்டிலை நோக்கி விரைந்து சென்றாள்.

மற்றவர்களும் அவளைப் பின்பற்றிச் சென்றார்கள். கட்டிலின் கீழ் துணிக் குவியலினால் மறைக்கப்பட்டுக் கிடந்த வந்தியத் தேவனைத் தூக்கிக் கட்டிலின் மேலே கிடத்தினார்கள்.

வந்தியத்தேவன் நினைவற்ற நிலையில் இருந்தான். எனினும் அவ்வப்போது வேதனைக் குரலில் முனகிக்கொண்டிருந்தான். அதனாலேயே அவன் உடலில் உயிர் இருக்கிறது என்று அறிந்து கொள்ளக் கூடியதாயிருந்தது.

வாணி அம்மை மூலிகைகளை வேக வைத்து மஞ்சள் பொடி சேர்த்துக் காயத்தில் வைத்துக் கட்டுவதற்காகக் கொண்டு வந்தாள். ஆழ்வார்க்கடியானும் சேந்தன் அமுதனும் வந்தியத்தேவனுடைய கை கால்களை இறுக்கிப் பிடித்துக் கொண்டார்கள். பூங்குழலியும் வாணி அம்மையும் அவனுடைய காயத்தில் வேக வைத்த மூலிகைகளைச் சுடச்சுட வைத்துத் துணியைப் போட்டுக் கட்டினார்கள்.

அப்போது ஏற்பட்ட வேதனையினால் வந்தியத் தேவன் கண் விழித்தான். எதிரில் ஆழ்வார்க்கடியானைப் பார்த்ததும் ''வைஷ்ணவனே! இப்படி வஞ்சகம் செய்து விட்டாயே! இங்கே



என்னை வரச் சொல்லிவிட்டு, பின்னோடு என்னைக் கொல்வதற்கு ஆள் அனுப்பி விட்டாயா?'' என்று குழறி விட்டு மறுபடியும் நினைவு இழந்தான்.

ஆழ்வார்க்கடியான் முகத்தில் மனச் சங்கடத்தின் அறிகுறி தென்பட்டது. அரை நினைவான நிலையில் வந்தியத்தேவன் கூறிய வார்த்தைகள் சேந்தன் அமுதன் — பூங்குழலி இவர்களுக்குத் தன்னைப் பற்றி மறுபடியும் ஐயத்தை உண்டாக்கி யிருக்கும் என்று எண்ணி அவர்கள் முகத்தைப் பார்த்தான்.

பூங்குழலியின் முகத்தில் பூத்திருந்த புன்னகை அவனுக்குச் சிறிது தைரியத்தை உண்டாக்கியது.

''வைஷ்ணவரே! வந்தியத் தேவரை நீர்தான் இங்கே அனுப்பி வைத்தீரா?'' என்று கேட்டாள்.

''ஆம், தாயே! ஆனால் இவனைக் கொல்வதற்குப் பின்னோடு நான் யாரையும் அனுப்பி வைக்கவில்லை.''

''அது இருக்கட்டும்; இங்கு எதற்காக இவரை அனுப்பினீர்?''

''தப்பி ஓடிச் செல்வதற்காக அனுப்பினேன். இந்த நந்தவனத்துக்குப் பக்கத்தில் அவனுக்காகவும் அவன் நண்பனுக்காகவும் இரண்டு குதிரைகளும் தயாராய் வைத்திருந்தேன்...''

''பின்னே, அவர் தப்பி ஓடவில்லை என்று எப்படித் தெரிந்தது? இக் குடிசையில் இருப்பதை எப்படி அறிந்தீர்?''

''அவனுக்காக நான் விட்டிருந்த குதிரையில் வேறொருவர் ஏறிக் கொண்டு போவதைப் பார்த்தேன். அதனாலேதான் சந்தேகம் உண்டாயிற்று...''

''திருமால் ஒன்று நினைக்கச் சிவன் வேறொன்று நினைத்து விட்டார்.''

''இது என்ன புதிர், தாயே! இவன் எப்படிக் காயம் அடைந்தான்?''

''வைஷ்ணவரே! நீர் என்ன உத்தேசத்துடன் இவரை இங்கே அனுப்பினீரோ, தெரியாது. ஆனால் இவர் சரியான சமயத்துக்கு இங்கே வந்து நான் கல்யாணம் செய்து கொள்வதற்குள் கைம்பெண் ஆகாமல் காப்பாற்றினார்!''

இவ்வாறு பூங்குழலி சொல்லிக் கொண்டிருக்கும்போதே, ஆழ்வார்க்கடியான், சேந்தன் அமுதன் இருவரும் ''என்ன? என்ன? என்ன?'' என்று அதிசயத்துடன் கேட்டார்கள்.

பூங்குழலி அமுதன் பக்கம் திரும்பி, ''ஆமாம்; உங்களிடம் கூட நான் சொல்லவில்லை. வெளியே ஒருவன் நின்று ஈட்டியினால் தங்களைக் குத்துவதற்குத்தான் குறி பார்த்தான். அப்போது இவர் வந்து குறுக்கிட்டு ஈட்டியைத் தான் ஏற்றுக் கொண்டு தங்களைக் காப்பாற்றினார்!'' என்றாள்.

சேந்தன் அமுதன் கண்களில் நீர் ததும்பியது. ''ஐயோ! எனக்காகவா என் நண்பர் இந்த ஆபத்துக்கு உள்ளானார்?'' என்றான்.

''அதனால் என்ன? தாங்கள் இவரைத் தப்புவிப்பதற்காக எவ்வளவு ஆபத்துக்கு உள்ளாகி யிருக்கிறீர்கள்!'' என்றாள் பூங்குழலி.

''அம்மணி! இந்த உலகத்தில் ஒருவர் செய்த உதவிக்கு உடனே பதில் உதவி செய்வதென்பது மிக அபூர்வமானது. நல்லது செய்தவர்களுக்குக் கெடுதல் செய்யாமலிருந்தாலே பெரிய காரியம். வந்தியத் தேவன் இங்கு சரியான சமயத்துக்கு வந்து, சேந்தன் அமுதனைக் காப்பாற்றியது அதிசயமான காரியந்தான்! ஆனால், கலியாணத்தைப் பற்றி ஏதோ சொன்னீர்களே? அது என்ன? கைம்பெண் ஆகாமல் காப்பாற்றியதாகவும் சொன்னீர்கள்!''

''ஆம், வைஷ்ணவரே! சிறிது நேரத்துக்கு முன்னாலேதான் நானும் இவரும் மணந்து கொள்வது என்று முடிவு செய்தோம். செம்பியன்மாதேவியின் ஆசியையும் பெற்றோம். பெரியபிராட்டி திரும்பிச் சென்று கால் நாழிகைக்குள் இவர் மேல் ஈட்டி பாய்வதற்கு இருந்தது. என்னால்கூட அதைத் தடுத்திருக்க முடியாது. அதனால் இவர் உயிருக்கு ஆபத்து வந்திருந்தால் என் கதி என்ன? கலியாணம் ஆவதற்கு முன்பே கைம்பெண் ஆகி விடுவேனல்லவா?''

''கருணாமூர்த்தியான திருமாலின் அருளினால் அப்படி யொன்றும் நேராது. செம்பியன்மாதேவியின் ஆசியும் வீண் போகாது. தாங்கள் இந்த உத்தம புருஷரை மணந்து கொண்டு நெடுங்காலம் இனிது வாழ்ந்திருப்பீர்கள். ஆனால் அந்தப் பரம சாதுவான பிள்ளையை ஈட்டியால் குத்திக் கொல்ல முயன்ற பாதகன் யாரா யிருக்கும்? அவனைத் தாங்கள் பார்த்தீர்களா? அடையாளம் ஏதேனும் தெரிந்ததா?''

''பார்க்காமல் என்ன? தெரியாமல் என்ன? அந்த வைத்தியர் மகனாகிய பினாகபாணி என்னும் சண்டாளன்தான். என் அத்தை மந்தாகினியைக் கோடிக்கரையிலிருந்து அக்கிரமமாகப் பிடித்துக் கொண்டுவந்து கொலைகாரனுக்குப் பலியாகச் செய்தவன்தான்! சோழ ராச்சியத்தில் இப்படி யெல்லாம் அக்கிரமங்கள் நடக்கின்றன...''

''இது என்ன அக்கிரமத்தைக் கண்டு விட்டீர்கள்? இதைவிட ஆயிரம் மடங்கு நடக்கப் போகிறது. சோழ நாட்டில் இன்றிரவு அராஜகம் ஆரம்பமாகப்

போகிறது. சிற்றரசர்களுக்குள் பெரிய சண்டை மூளப் போகிறது. நாடெங்கும் மக்கள் ஒருவரோடொருவர்சண்டையிட்டுக் கொண்டு மடியப் போகிறார்கள்! ஸ்ரீமந் நாராயணமூர்த்தியின் அருளினால் ஒரு பெரிய அற்புதம் நடந்தாலன்றி இந்த நாட்டுக்கு வரப் போகும் விபத்துக்களைத் தடுக்க முடியாது!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''வைஷ்ணவரே! இது என்ன இப்படிச் சாபம் கொடுப்பது போல் பேசுகிறீர்? சோழநாடு செழிப்படைய ஆசி கூறலாகாதா?'' என்றான் அமுதன்.

''நாடு எப்படியாவது போகட்டும்! நாங்கள் கோடிக்கரைக்குக் குடி போய் விடுகிறோம்!'' என்றாள் பூங்குழலி.

''நாம் போய்விடலாம்; என் உயிரைக் காப்பாற்றிய இந்த உத்தம நண்பனை என்ன செய்வது?'' என்று சேந்தன் அமுதன் கேட்டான்.

''இவனை உங்களால் எப்படியும் காப்பாற்ற முடியாது. இங்கேயே நீங்கள் இருந்தாலும் பயனில்லை. சிறையிலிருந்து தப்பி ஓடியவர்களைப் பிடிப்பதற்கு இப்போதே நாலா பக்கமும் சேவகர்கள் தேடி அலைகிறார்கள். விரைவில் இங்கேயும் வருவார்கள். வாசலில் நிற்கும் காவலர்களுக்கு நானே என்ன சமாதானம் சொல்லி அழைத்துப் போகிறது என்று தெரியவில்லை!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''ஐயா! வைஷ்ணவரே! நீர் எவ்வளவோ கெட்டிக்காரர். முதன் மந்திரி அநிருத்தருக்கே யோசனை சொல்லக் கூடியவர். கொலைகாரனால் படுகாயம் பட்டிருக்கும் இந்த வாணர்குல வீரரைக் காப்பாற்ற ஒரு யோசனை சொன்னால் உமக்குப் புண்ணியம் உண்டு. நாங்கள் இருவரும் என்றென்றைக்கும் உமக்கு நன்றிக் கடன் பட்டிருப்போம்!''

''தேவி! அது அவ்வளவு சுலபமன்று!''

''ஐயா! நிமிஷத்துக்கு நிமிஷம் எனக்கு மரியாதை அதிகரித்துக் கொண்டு வருகிறதே! நேற்றுவரை என்னை 'ஓடக்காரி' என்று அழைத்தீர். சற்று முன்னால் 'அம்மணி' என்றீர். இப்போது 'தேவி' என்று அழைக்கிறீர். சற்றுப் போனால் 'இளவரசி!' என்றே அழைத்து விடுவீர் போலிருக்கிறதே!''

''ஆம், இளவரசி! இதோ நினைவற்றுக் கிடக்கும் இந்த வீர வாலிபனைக் காப்பாற்ற வேண்டுமானால் அதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. தங்களை மணந்துகொள்ளப் போகும் இந்தப் பாக்கியசாலி ஒரு நாளைக்கு இளவரசராக வேண்டும்! அவர் இளவரசர் என்றால் தாங்களும் இளவரசிதானே?''

''வைஷ்ணவரே! இது என்ன பரிகாசம்? நானாவது ஒரு நாள் இளவரசனாக இருப்பதாவது? எதற்காக?'' என்று கேட்டான் அமுதன்.

''என் ஒருவனுக்கு மட்டும் தெரிந்த இரகசியத்தை இப்போது உங்கள் இருவருக்கும் சொல்லப் போகிறேன். கேளுங்கள்; — இல்லை, முதலில் இதைப் பாருங்கள்!'' என்று கூறிவிட்டு ஆழ்வார்க்கடியான் தன்னுடன் கொண்டு வந்திருந்த மூட்டையை அவிழ்த்து அவர்களுக்குக் காட்டினான்.

மதுராந்தகர் அணிந்திருந்த கிரீடமும் முத்து மாலைகளும் வாகுவளையங்களும் ஜாஜ்வல்யமாக ஜ்வலித்தன.

''ஆகா! இவை இளவரசர் மதுராந்தகர் தரித்திருந்தவை அல்லவா? சற்று முன்பு இங்கேயே நாங்கள் பார்த்தோமே!'' என்றான் அமுதன்.

''இவை எங்கிருந்து கிடைத்தன?'' என்றாள் பூங்குழலி.

''இந்த நந்தவனத்தின் வேலி ஓரத்தில் கிடந்து கிடைத்தன. இன்னும், நான் சொல்ல வந்த இரகசியத்தையும் கேளுங்கள். வடவாற்றங் கரையோடு நான் வந்து கொண்டிருந்த போது இரண்டு குதிரைகளின் மீது இரண்டு பேர் விரைவாகப் போய்க் கொண்டிருந்ததைக் கண்டேன். அவை நான் இங்கு வந்தியத் தேவனுக்காகவும் இவனுடன் சிறையிலிருந்து தப்பிய பைத்தியக்காரனுக்காகவும் இங்கே விட்டுப் போன குதிரைகள். அந்தப் பைத்தியக்காரனைத் தங்களுக்குக்கூடத் தெரியுமே?''

''ஆமாம்; தெரியும். பாண்டிய வம்சத்து மணி மகுடத்தையும் இரத்தின ஹாரத்தையும் பற்றி யாரைப் பார்த்தாலும் உளறிக் கொண்டிருந்தவன்.''

''அவனேதான்! வடவாற்றங் கரையோடு அதிவேகமாகச் சென்ற குதிரைகளில் ஒன்றின் மீது அந்தப் பைத்தியக்காரன் இருந்தான். இன்னொரு குதிரை மேலிருந்தவர் இளவரசர் மதுராந்தகர் போலத் தோன்றியது. இங்கு வந்த பிறகு அது நிச்சயமாயிற்று.''

''இது என்ன விந்தை? மதுராந்தகர் எதற்காகத் தமது ஆடை ஆபரணங்களைக் கழற்றி எறிந்து விட்டு ஓட வேண்டும்?''

''அதுதான் எனக்கும் தெரியவில்லை. முதன் மந்திரியிடம் சொல்லி ஓடியவர்களைத் தொடர்வதற்கு ஆட்கள் அனுப்பப் போகிறேன். ஆனால் அதற்குள்ளே இங்கு பெரிய விபரீதங்கள் நடந்து விடும் என்று அஞ்சுகிறேன்.''

''என்ன விபரீதம் நடந்து விடும்?''

''பழுவேட்டரையர்களும் அவர்களுடைய கட்சியைச் சேர்ந்த சிற்றரசர்களும் இதோ தஞ்சைக் கோட்டை வாசலை அணுகிக்கொண்டிருக்கிறார்கள். கொடும்பாளூர் வேளாரும் முதன் மந்திரியும் மலையமானும் அவர்களை வரவேற்கக் கோட்டை வாசலில் காத்துக் கொண்டிருக்கிறார்கள். ராஜ்ய உரிமை பற்றிச் சமாதானமாகப் பேசி முடிவு செய்ய வேண்டும் என்பது சக்கரவர்த்தியின் விருப்பம்; கட்டளை. ஆனால் பழுவேட்டரையர்கள் சமாதானப் பேச்சுத் தொடங்குவதற்கு முன்பு 'மதுராந்தகர் எங்கே?' என்று கேட்பார்கள். அவரைக் காணோம் என்றதும் கொடும்பாளூர் வேளார் மீது பாய்வார்கள்! சேநாதிபதிதான் பொன்னியின் செல்வருக்குப் பட்டத்தை நிச்சயம் செய்து கொள்வதற்காக மதுராந்தகரைக் கொன்றுவிட்டார் என்பார்கள். பெரிய வேளார் அதற்கு மறுப்புச் சொன்னாலும் அவரால் நிரூபிக்க முடியாது. உடனே பயங்கரமான உள்நாட்டு யுத்தம் ஏற்படும்; சோழ நாடு வெகு விரைவில் சீர்குலையும்.''

''அதற்குள் நாம் இங்கிருந்து புறப்பட்டுப் போய்விடுவோம்!''

''தேவி! அது முடியாத காரியம்!''

''பின்னே என்ன சொல்கிறீர்?''

''இந்தக் கிரீடத்தையும் ஆபரணங்களையும் சற்று நேரம் சேந்தன் அமுதன் அணிந்து கொள்ளட்டும். பொன்னியின் செல்வரை ஏற்றிக் கொண்டு வந்த யானையை நான் அழைத்துக் கொண்டு வருகிறேன். அதில் இவர் ஏறிக்கொள்ளட்டும். என்னுடைய ஆட்களை 'மதுராந்தகர் வாழ்க!' என்று கோஷித்துக் கொண்டு யானைக்கு முன்னும் பின்னும் போகச் சொல்கிறேன். மதுராந்தகர் ஏறி வந்த பல்லக்கும் அருகில் இருக்கிறது. அதில் வந்தியத் தேவனைப் போட்டுத் திரையை விட்டுவிடுவோம். தேவி! தாங்கள் பல்லக்கின் பக்கமாக நடந்து வாருங்கள். மற்றதை யெல்லாம் என்னிடம் விட்டு விடுங்கள்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''இது என்ன பைத்தியக்கார யோசனை?'' என்றான் சேந்தன் அமுதன்.

''இவர் கிரீடத்தை வைத்துக்கொண்டால் அடையாளம் தெரியாமல் போய் விடுமா?'' என்றாள் பூங்குழலி.

''இராத்திரி வேளையில் யானை மேல் உட்கார்ந்திருப்பவரை யார் அடையாளம் கண்டுபிடிக்க முடியும்? சந்தேகம் ஏற்பட்டால் அல்லவோ கூர்ந்து பார்க்கப் போகிறார்கள்! உங்களுடனேயே நானும் வரப் போகிறேன். உங்கள் எல்லாரையும் கோட்டைக்குள் முதன் மந்திரியின் வீட்டில் பத்திரமாகக் கொண்டு போய்ச் சேர்ப்பது என் பொறுப்பு. இந்த வாணர் குலத்து வீரனைக் காப்பாற்றுவதற்கு வேறு வழி ஒன்றுமில்லை!''

இன்னும் சிறிது நேரம் விவாதம் செய்த பிறகு சேந்தன் அமுதனும் பூங்குழலியும் ஆழ்வார்க் கடியானுடைய யோசனைக்கு இணங்கினார்கள்.

## அத்தியாயம் அறுபத்தொன்பது

# "வாளுக்கு வாள்!"

பழுவேட்டரையர் – சம்புவரையர் கோஷ்டி தஞ்சை கோட்டை வாசலை அணுகியபோது கடலும் கடலும் மோதிக் கொள்வது போலிருந்தது.

''சோழ நாட்டுத் தனாதிகாரி, இறை விதிக்கும் தேவர், முப்பத்தாறு போர்க்களங்களில் அறுபத்து நாலு விழுப்புண் பெற்ற வீராதி வீரர் பெரிய பழுவேட்டரையர் விஜயமாகிறார்!'' என்பது போன்ற விருதுகளை ஒவ்வொரு சிற்றரசருக்காகவும் கட்டியம் கூறுவோர் கர்ஜித்து முழங்கினார்கள். அவ்விதமே கொடும்பாளூர் வேளார், திருக்கோவலூர் மலையமான் முதலியோருக்கு விருதுகள் முழங்கப்பட்டன. இடையிடையே முரசங்களும் சங்கங்களும் முழங்கின. கோட்டைச் சுவர்கள் எதிரொலி செய்தன.

கோட்டை வாசலில் நின்ற சேநாதிபதி பெரிய வேளார், மலையமான், முதன் மந்திரி முதலியோர் கீழே நின்று கொண்டிருந்தபடியால் பழுவேட்டரையர்களும் தத்தம் வாகனங்களின் மீதிருந்து இறங்க வேண்டியதாயிற்று. தங்களை வாகனங்களிலிருந்து இறங்கச் செய்து கோட்டைக்கு நடத்தி அழைத்துப் போவதற்காகவே அவ்வாறு சேநாபதி முதலியவர்கள் வரவேற்கும் பாவனையில் கோட்டை வாசலில் நிற்பதாகச் சின்னப் பழுவேட்டரையர் எண்ணினார். அவ்வாறே மற்றவர்களிடம் கூறினார். சேநாதிபதி கோஷ்டியாருடன் பேசும் பொறுப்பைத் தம்மிடமே விட்டுவிடும்படி கேட்டுக் கொண்டார்.

பெரிய வேளாரும் மற்றவர்களும், வருகிறவர்களுடன் சிறிது நேரம் பேச

வேண்டியிருக்கலாம் என்று எதிர்பார்த்தார்கள். ஆகையால் கோட்டை வாசலை மறித்து நில்லாமல், சற்று அப்பாலிருந்த கொடி மரத்து மைதானத்தில் நின்று கொண்டிருந்தார்கள்.

சிற்றரசர்கள் வாகனங்களிலிருந்து இறங்கி அவர்களை அணுகி வந்ததும், பெரிய வேளார் "வருக! வருக! சோழ ராச்சியத்தைத் தாங்கி நிற்கும் அஷ்டதிக்குக் கஜங்களை யொத்த சிற்றரசர்களே! வருக! உங்கள் வரவினால் சோழ ராச்சியத்துக்கும் சோழ குலத்துக்கும் நன்மை உண்டாகுக!" என்றார்.

உடனே சின்னப் பழுவேட்டரையர் "ஆம், ஐயா! எங்கள் வருகையினால் சோழ ராச்சியத்துக்கு நன்மை உண்டாகுக! அது போலவே தங்கள் போகையினாலும் நன்மை விளைக!" என்றதும் பெரிய வேளாரின் கண்கள் சிவந்தன.

"ஐயா! சோழ ராச்சியத்தின் சிறப்புக்காகவும், சோழ குலத்தின் புகழுக்காகவும் நாலு திசைகளிலும் போவது தான் கொடும்பாளூர் வேளார் குலத்தின் வழக்கம். என் அருமைச் சகோதரன் பராந்தகன் சிறிய வேளான் ஈழத்துப் போர்க்களத்தில் உயிர் நீத்ததை உலகமெல்லாம் அறியும். நானும் சில நாளைக்கு முன்பு வரை ஈழநாட்டில் தான் இருந்தேன். குண்டு சட்டியில் குதிரையோட்டும் கலையை எங்கள் குலத்தார் அறியார்கள். கோட்டைச் சுவர்களுக்குள்ளே பத்திரமாக இருந்து கொண்டு அரண்மனை அந்தப்புரங்களையும் பொக்கிஷ நிலவறைகளையும் காத்துக் கொண்டிருக்கும் வழக்கத்தையும் நாங்களறியோம். உங்கள் வருகையினாலும், என்னுடைய போகையினாலும் சோழ குலம் நன்மையுறுவது உறுதியானால், பின்னர் ஒரு கணமும் இங்கு தங்க மாட்டேன்!" என்று பெரிய வேளார் கர்ஜித்தார்.

இச்சமயம் முதன் மந்திரி அநிருத்தர் தலையிட்டு, "மன்னர் குலத் தோன்றல்களே! உங்கள் எல்லோருடைய வரவும் சோழ நாட்டுக்கு நன்மையே தரும் என்பதில் ஐயம் என்ன? நீங்கள் ஒவ்வொருவருமே சோழ ராச்சியத்தின் மேன்மை கருதித் தலைமுறை தலைமுறையாகப் பாடுபட்டவர்கள். சோழ குலத்துக்கு உயிரைக் கொடுத்தவர்கள் உங்கள் ஒவ்வொருவருடைய பரம்பரையிலும் உண்டு. இப்போதும், இனி எப்போதும் சோழ நாட்டுக்கு உங்கள் கூட்டுறவும், சேவையும் தேவையா யிருக்கும். இதனாலேயே பராந்தக சுந்தர சோழ சக்கரவர்த்தி உங்களுக்குள் நேர்ந்துள்ள வேற்றுமையைக் குறித்து வருந்துகிறார். தமது அருமைப் புதல்வர், வீரபாண்டியன் தலைகொண்ட வீராதி வீரர், ஆதித்த கரிகாலர் அகால மரணமடைந்த பெருந்துயரையும் மறந்து உங்களை யெல்லாம் ஒருமிக்க அழைத்திருக்கிறார். பட்டத்து உரிமை பற்றியும் மற்ற எல்லாப் பிரச்னைகளைப் பற்றியும் சக்கரவர்த்தியின் முன்னிலையில் சமாதானமாகப் பேசி முடிவு செய்து கொள்ளலாம். மன்னர் பெருமக்களே! உங்களை யெல்லாம் பெரிதும் வேண்டிக் கொள்கிறேன். மூத்த புதல்வரைப் பறி கொடுத்துத் துயரத்தில் ஆழ்ந்திருக்கும் சக்கரவர்த்தியின் உள்ளத்தை உங்கள் பூசல்களினால் புண்படுத்தாதீர்கள்!" என்று கேட்டுக் கொண்டார்.

இந்த வார்த்தைகள் அங்கே கூடியிருந்த எல்லோருடைய மனத்திலும்



## லிங்கன் வாதம்!

★ டக்ளஸ் என்னும் நண்பரைப் பற்றி லிங்கன்: நான் சிறிய வயதில் உபயோகப்படுத்திக் கொண்டிருந்த தோணியில் சத்தம் வந்தால் துடுப்புக்கள் திரும்பாது. துடுப்புக்கள் திரும்பும்போது சத்தம் வராது. நண்பரும் அதே போல்தான், அவர் பேசும்போது சிந்திப்பதில்லை; சிந்திக்கும்போது பேசுவதில்லை.

★ எதிர்க் கட்சிக்காரர் ஒருவர் எவ்வளவு எடுத்துச் சொன்னாலும் புரிந்து கொள்ளாமல் வாதித்துக் கொண்டிருந்தபோது அவரை மடக்க லிங்கன் கேட்டார்:

"பசுவுக்கு எத்தனை கால்கள்?"

"நான்கு."

"பசுவின் வாலைக் கால் என்று வைத்துக் கொண்டால்?...."

"ஐந்து!"

"அங்கேதான் நீங்கள் தவறு செய்கிறீர்கள்: 'வாலைக் கால்' என்று சும்மா வைத்துக் கொண்டால் அது காலாகி விடுமா?"

- கே. வி. எம்.

ளைத்தன. தங்களுடைய சொந்தக் கோப தாபங்களை யெல்லாம் வெளிப்படுத்திக் கொள்வதற்கு இது தக்க சமயமல்ல என்பதை உணர்ந்தார்கள்.

உடனே, சின்னப் பழுவேட்டரையர், ''முதன் மந்திரி! சக்கரவர்த்தியின் விருப்பத்தின்படியே நாங்கள் நடந்து கொள்ளச் சித்தமாயிருக்கிறோம். சக்கரவர்த்தியின் தரிசனம் எங்களுக்கு எப்போது கிடைக்கும்? இன்று இரவே பார்க்க முடியுமா? சக்கரவர்த்தியின் விருப்பத்தை அவருடைய வாய்மொழியாக நேரில் தெரிந்து கொள்ள விரும்புகிறோம்!'' என்றார்.

''தளபதி! தங்கள் விருப்பம் நியாயமான விருப்பம்தான்! அது நிறைவேறும் என்பதிலும் சந்தேகமில்லை. ஆனால் சக்கரவர்த்தியின் உடல் நிலையும் மன நிலையும் நீங்கள் எல்லோரும் அறிந்தவை. இரவு வந்தால் சக்கரவர்த்தியின் உடல் வேதனையும் மன வேதனையும் அதிகமாகின்றன. மேலும் சிற்றரசர்களுடன் பட்டத்து உரிமையைப் பற்றிப் பேசுவதற்கு முன்னால் சக்கரவர்த்தி செம்பியன்மாதேவியுடன் முடிவாகப் பேச விரும்புகிறார். அவருடைய மனத்தை மாற்ற ஒரு கடைசி முயற்சி செய்ய விரும்புகிறார். எதன் பொருட்டு என்பது உங்களுக்குத் தெரியும். ஆகையால் நாளைப் பகல் முடிவதற்குள்ளே சக்கரவர்த்தி உங்களையெல்லாம் அழைப்பார். இன்றிரவு நீங்கள் எல்லோரும் கோட்டைக்குள் வந்து அவரவர்களுடைய அரண்மனையில் நிம்மதியாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறார். கோட்டைக்குள் அரண்மனை இல்லாதவர்களுக்கு வேண்டிய ஜாகை வசதிகள் செய்து கொடுக்கும்படி பெரிய வேளாருக்குக் கட்டளையிட்டிருக்கிறார்...''

**ம**றுபடியும் சின்னப் பழுவேட்டரையர் குறுக்கிட்டு, ''முதன் மந்திரி! எங்களுக்கு ஜாகை வசதிகள் தேவை இல்லை. போர்க் களங்களில் திறந்த வெளியில் இருக்கப் பயின்றவர்கள். சக்கரவர்த்தி எங்களை நாளைக்குத்தான் பார்க்கப் போகிறார் என்றால், இன்றிரவு கோட்டைக்குள் நாங்கள் வரவேண்டிய அவசியம் என்ன?'' என்றார்.

''உங்களுடைய அரண்மனைகளில் நீங்கள் வந்து தங்காமல் வெளியில் தங்க வேண்டிய அவசியம் என்ன?'' என்று கேட்டார் முதன் மந்திரி.

''தளபதி காலாந்தக கண்டர் தஞ்சைக் கோட்டைக்குள் வந்து தங்கப் பயப்படுகிறார் போலும்!'' என்றார் சேநாதிபதி.

''பயமா? அது எப்படி இருக்கும்? கறுப்பா? சிவப்பா? அதற்குக் கொம்பு உண்டா? சிறகு உண்டா? ஈழத்துப் போர்க் களத்திலிருந்து அவசரமாக ஓடிவந்திருக்கும் பெரியவேளாருக்கு ஒரு வேளை தெரிந்திருக்கலாம்'' என்றார் சின்னப் பழுவேட்டரையர்.

'ஏது ஏது இவர்கள் இருவரும் முட்டி மோதிக் கொள்வதைத் தடுக்க முடியாது போலிருக்கிறதே' என்று முதன் மந்திரி சிந்தித்துக் கொண்டிருந்தபோது பெரிய பழுவேட்டரையர், வானவெளியெல்லாம் நிறையும்படி 'ஹும்' என்று சத்தமிட்டுக் கொண்டு முன்னால் வந்தார்.

அவரை எல்லோரும் மிகுந்த மரியாதையுடன் கவனித்தார்கள்.

''தம்பி! கொடும்பாளூர் வேளார் பாரி வள்ளலின் வம்சத்தில் வந்தவர். வேளிர் குலத்தினர் வாக்குத் தவறி நடந்ததில்லை. பெரிய வேளார் நமக்குப் பாதுகாப்பு அளிப்பதாகச் சொல்லும்போது, நாம் கோட்டைக்குள் போவதற்கு என்ன தடை?'' என்று கேட்டார் பெரிய பழுவேட்டரையர்.

''அண்ணா! நமக்கு இன்னொருவரின் பாதுகாப்பும் தேவையில்லை; வாக்குறுதியும் தேவையில்லை. நம்முடைய உடைவாள்களும் முப்பதினாயிரம் வீரர்களின் வேல்களும் இருக்கின்றன. இந்தத் தஞ்சைக் கோட்டையின் தளபதி நான். கோட்டை மறுபடி என் வசம் வந்தாலன்றி, நான் கோட்டைக்குள் போகச் சம்மதியேன்!'' என்றார் காலாந்தக கண்டர்.

சேநாதிபதி வேளார் பெரிய பழுவேட்டரையரைப் பார்த்து, ''ஐயா! சக்கரவர்த்தி கட்டளை பிறப்பித்தால் அவ்வாறே செய்யச் சித்தமாயுள்ளேன்'' என்றார்.

''சக்கரவர்த்தியின் கட்டளையின் பேரிலா கோட்டையை இவர் கைப்பற்றினார்?''

''இல்லை; வாளின் பலத்தைக் கொண்டு இந்தக் கோட்டையைக் கைப்பற்றினேன்!'' என்றார் பெரிய வேளார்.

''வாளின் பலம் கொண்டு திரும்பக் கைப்பற்றுவேன்! இப்போதே சோதித்துப் பார்க்கலாம்!'' என்று சின்னப் பழுவேட்டரையர் சொல்லிக்கொண்டே கத்தியின் பிடியில் கையை வைத்தார்.

**பெ**ரிய பழுவேட்டரையர் தம் தம்பியைக் கையினால் மறித்து, ''தம்பி! வாள் எடுக்கும் சமயம் இதுவல்ல! சக்கரவர்த்தியின் விருப்பத்தின்படி நாம் இங்கே வந்திருக்கிறோம்!'' என்றார்.

''அண்ணா! கோட்டைக்குள் புகுந்ததும் இவர் நம்மைச் சிறையிட மாட்

# தன் மனம்போல்

# இன்புறவே, தன் வழியில் தென்புறவே

# க்ளாக்ஸோஸ்-D®



தேநீரில் அல்லது காப்பியிலே க்ளாக்ஸோஸ்-D



குடிநீரிலே க்ளாக்ஸோஸ்-D



எலுமிச்சஞ் சாற்றிலே க்ளாக்ஸோஸ்-D



பழச் சாற்றிலே க்ளாக்ஸோஸ்-D



நேரடியாக க்ளாக்ஸோஸ்-D



பாலிலே க்ளாக்ஸோஸ்-D

உங்கள் சுதந்திரம். க்ளாக்ஸோஸ்-D
எப்போது, எப்படிச் சாப்பிடுவது
என்பதற்குக் கட்டுதிட்டங்கள் இல்லை.
களைத்த மனசுக்கு எப்படிப் படுகிறதோ
அப்படியே
எப்படிச் சாப்பிட்டாலும் சரி, ஒன்று நிச்சயம்:
இரண்டொரு ஸ்பூன்களிலே உடனடி
சக்திபெற
இதனினும் இனிய வழி
இன்னொன்று இல்லை.
அசதி இனி வந்தால், வசதியாக
விரட்டுங்கள்.



## ஊக்க சக்தி உடனடி: அதற்கே க்ளாக்ஸோஸ்-D®

dCP/GL/26 tam



கீதா

"நாம் சத்தம் செய்யாமெ பூனையின் கழுத்திலே மணியைக் கொண்டு போய்க் கட்டிடணும். என்ன வழி ?"

"அதுக்கென்ன, பூனை தூங்கும்போது நாக்கு இல்லாத மணியாய்ப் பார்த்துக் கட்டிட்டாப் போறது !"

---

டார் என்பது என்ன நிச்சயம்? சக்கரவர்த்தியின் கட்டளையை எதிர்பாராமல் திடீரென்று கோட்டையைத் தாக்கிக் கைப்பற்றியவரை எப்படி நம்பச் சொல்கிறீர்கள்?" என்று கேட்டார் சின்னப் பழுவேட்டரையர்.

"இவரை நம்பித்தானே நம்முடைய பெண்டு பிள்ளைகளை யெல்லாம் இந்தக் கோட்டையிலே விட்டு விட்டு நீ வெளியேறினாய்? இளவரசர் மதுராந்தகரையும் விட்டு விட்டுக் கிளம்பினாய்!" என்றார் பெரியவர்.

"அது தவறோ என்று இப்போது சந்தேகப்படுகிறேன். மதுராந்தகருக்கு மட்டும் ஒரு சிறு தீங்கு நேர்ந்திருக்கட்டும்; கொடும்பாளூர் குலத்தை அடிவேரோடு அழித்து விட்டு மறு காரியம் பார்ப்பேன்!" என்று இரைந்தார் சின்னப் பழுவேட்டரையர்.

இதுவரையில் அலட்சியமாகப் பேசி வந்த சேநாதிபதி பூதி விக்கிரம கேசரிக்கு இப்போது கடுங் கோபம் வந்து விட்டது. அந்த இடத்தில் ஒரு பெரிய விபரீதமான மோதல் அடுத்த கணமே ஏற்பட்டிருக்கக் கூடும்.

நல்ல வேளையாக அந்தச் சமயத்தில் கோட்டை வாசலில் ஏதோ கலகலப்பு ஏற்பட்டது. எல்லோருடைய கவனமும் அங்கே சென்றது.

சற்று முன்னால் முதன் மந்திரி அநிருத்தர் தம்மைச் சமிக்ஞையினால் அழைத்த ஆழ்வார்க்கடியானிடம் சென்றிருந்தார். அவன் ஏதோ அவரிடம் இரகசியச் செய்தி கூறினான். அதைக் கேட்டுவிட்டு அவர் பழுவேட்டரையர்களும் பெரிய வேளாரும் நின்ற இடத்தை அணுகி வந்தார். வரும் போது சின்னப் பழுவேட்டரையர் மதுராந்தகத் தேவரைப் பற்றிக் கூறிய வார்த்தைகள் அவர் காதில் விழுந்தன.

"தளபதி! இளவரசர் மதுராந்தகரைப் பற்றி என்ன கவலை? அவருக்கு யாராலும் எவ்விதத் தீங்கும் நேரிடாது. சற்று முன்னால்கூட மதுராந்தகத் தேவரும் அவருடைய அன்னை செம்பியன்மாதேவியும் கோட்டைக்கு வெளியே சென்றார்கள். திருக்கோயிலுக்குப் புஷ்ப கைங்கரியம் செய்யும் சேந்தன் அமுதனைப் பார்க்கப் போயிருந்தார்கள்..." என்று முதன் மந்திரி கூறுவதற்குள், காலாந்தக கண்டர் குறுக்கிட்டார்.

"ஆமாம்; தாயும் மகனும் கோட்டைக்கு வெளியே வந்தார்கள். ஆனால் தாய் மட்டும்தான் கோட்டைக்குள் திரும்பிச் சென்றார்!" என்றார் சின்னப் பழுவேட்டரையர்.

"ஆகா! அது உங்களுக்கு எப்படித் தெரிந்தது?" என்றார் முதன் மந்திரி.

"முதன் மந்திரி! உங்களிடம் மட்டும்தான் கெட்டிக்கார ஒற்றர்கள் உண்டு என்று நினைத்தீர்களா! வெளியே வந்த மதுராந்தகத் தேவர் திரும்பக் கோட்டைக்குள்ளே போகவில்லை. அதன் காரணத்தை நான் அறிய வேண்டும்!" என்றார் சின்னப் பழுவேட்டரையர்.

முதன் மந்திரியின் முகத்தில் புன்னகை மலர்ந்தது. அதே சமயத்தில் கோட்டை வாசலில், "இளவரசர் மதுராந்தகத் தேவர் வாழ்க! வாழ்க!" என்ற கோஷங்கள் எழுந்தன.

எல்லாரும் கோஷங்கள் வந்த அந்தத் திசையை ஆவலோடு நோக்கினார்கள்.

கோட்டை வாசலுக்குள் பிரவேசித்துக்கொண்டிருந்த யானையின் மீது இளவரசுக் கிரீடமும் பிற ஆபரணங்களும் அணிந்த 'மதுராந்தகர்' வீற்றிருந்தார்.

யானைக்குப் பக்கத்தில் மூடு பல்லக்கு ஒன்று ஊர்ந்து சென்றது.

"தளபதி! மதுராந்தகத் தேவர் கோட்டைக்குள் திரும்பிப் போவதற்குச் சிறிது கால தாமதம் நேர்ந்தது. வாணி அம்மையின் மகன் சேந்தன் அமுதன் குதிரையின் மீதிருந்து கீழே விழுந்து படுகாயமுற்றிருக்கிறான். அவனைப் பல்லக்கில் ஏற்றிக் கோட்டைக்குள் அழைத்து வரும்படியாகச் செம்பியன் மாதேவி சொல்லி விட்டு முன்னால் சென்று விட்டார். அன்னையின் விருப்பத்தை மகன் நிறைவேற்றி வைக்கிறார். அமுதனைப் பல்லக்கில் ஏற்றிக் கொண்டு தாம் யானை மீது செல்கிறார். விரைவிலே மகுடாபிஷேகம் நடக்கும் போது பட்டத்து யானையின் மீது ஊர்வலம் வரவேண்டியிருக்குமல்லவா? அதற்கு இப்போதே ஒத்திகை செய்து கொள்கிறார்!" என்றார் முதன் மந்திரி அநிருத்தர்.

(தொடரும்)

# மூன்று மந்திரவாதிகள்

கதை: வாண்டுமாமா
சித்திரம்: [illegible]

5



















யார் முதலில், இங்கு வந்தாலும் மற்றவருக்காக அவர்கள் காத்திருக்க வேண்டும். இந்த வேங்கை மரத்தில் நாம் பதித்துள்ள அம்புத் துவாரத்திலிருந்து ரத்தம் வழியுமானால் அது அந்த அம்புக்குரியவருக்கு ஏதோ அபாயம் என்பதை அறிவிக்கும் எச்சரிக்கை. அதைக் கண்டவர் உதவிக்கு உடனே விரைய வேண்டும்.


இரவை, அந்த ஆலமரத்தடியில் கழித்து விட்டு மறுநாள் உதயத்தில் பிரயாணப்படுகிறார்கள் சகோதரர்கள்.
சகோதரர்களே! நம் பிரயாணம் வெற்றிகரமாகி மீண்டும் நாம் ஒன்று சேர ஆண்டவன் அருளை வேண்டிப்பிரிவோம்.


அரசகுமாரர்களே! நாங்களும் உங்களிடம் விடை பெற வேண்டிய நேரம். இதற்குமேல் எங்களால் பின்தொடர்ந்து வர இயலாது. இந்த எல்லைக்குள் தான் எங்கள் ஆதிக்கம். சென்று வாருங்கள். வென்று திரும்புங்கள்!


அருமைத் தோழர்களே! உங்கள் அன்பை மறக்க மாட்டோம். வென்று வருவோம். மறுபடியும் ஒன்று சேருவோம்.


இளவரசர்கள் தனித்தனியே வெவ்வேறு திசைகளில் தங்கள் பிரயாணத்தைத் தொடர்ந்தார்கள்.
முதல் பாகம் முற்றியது

# இரண்டாம் பாகம் – நெட்டையன், குட்டையன், பொட்டையன்!



















தொடரும்

# சிந்தால் வாக்குறுதி...

மேனியெழிலுக்கு முழுப் பராமரிப்பு

புதுமை குன்றாத நறுமணம்

துர்நாற்றத்திலிருந்து சிறந்த பாதுகாப்பு

**...சிந்தால் மட்டுமே நிறைவேற்றக்கூடியது**




அற்புத பாக்டீரியாநாசினி ஜி- 11 ( ஹெக்ஸாக்ளோரோஃபீன் ) அடங்கிய ஒரே சோப் சிந்தால். உடலில் துர்நாற்றத்திற்கும் சருமத்தில் களங்கங்களுக்கும் காரணமாக விளங்கும் பாக்டீரியாக்களை ஜி-11 அழித்து விடுகிறது. சிந்தால் உங்கள் மேனியெழிலை அப்பழுக்கின்றி வைத்திருப்பதுடன், உங்களை நாள் முழுவதும் புத்துணர்ச்சியுடன் வைத்திருக்கிறது.

Interpub/GSC/5 Tam

# சேவைக்கு ஒரு தொழில் தேவைக்கு ஒரு பட்டம்!

**அண்மையில் தபால் தந்தி வாரம் கொண்டாடப்பட்டது. அதை யொட்டி நமது நிருபர் தபால் ஊழியர் ஒருவரைப் பேட்டி கண்டார்.**



தபால் பட்டுவாடாப் பணியைச் செய்யும் இளைஞர் அமல்ராஜ் ஒரு பி. ஏ. பட்டதாரி என்று தெரிந்து கொள்ளும்போது வியப்படைகிறோம். அதிலும் அவர் ஆங்கில இலக்கியத்தைப் பாடமாக எடுத்துப் படித்தவர் என்று கேட்கும் போது இது என்ன அதிசயம் என்றும் நமக்குத் தோன்றுகிறது.

மௌண்ட்ரோட் தலைமை அஞ்சலகத்தில் மூன்றுவது பீட்டில் தபால்காரராகப் பணியாற்றுகிறார் திரு எம். அமல்ராஜ்.

மதுரை செயின்ட் மேரி உயர்நிலைப் பள்ளியில் படித்துத் தேறிய பிறகு பாளையங்கோட்டை செயின்ட் சேவியர் கல்லூரியில் பி. யூ. ஸி. வகுப்பில் சேர்ந்தார். பி. யூ. ஸி. பரீட்சையில் இரண்டாவது வகுப்பிலும் வெற்றி பெற்றார். தன் பெற்றோர்களின் ஏழு குழந்தைகளில் இவர்தான் மூத்தவர். வேலை தேட வேண்டிய நிர்ப்பந்த சூழ்நிலை.

"எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் நான் முந்நூற்றி இருபது மார்க்தான் வாங்கியிருந்தேன். போஸ்ட் ஆபீஸ் குமாஸ்தா தேர்வுக்கு விண்ணப்பிக்கலாம். ஆனால் அந்த மார்க்குகளுக்குத் தேர்வு கிடைக்காது என்று தெரியும். குறைந்தபட்சம் அந்த நாட்களில் நானூறாவது வாங்கியிருக்க வேண்டும்! பிற்பட்ட வகுப்புக்களுக்கான சலுகைகளையும் என்னால் பெற முடியாது. அப்போது எங்கள் குடும்பநண்பர் என்னைத் தபால்காரர்வேலைக்கு மனுப் போடுமாறு யோசனை சொன்னார். தபால்காரராகச் சேர்ந்த சில வருஷங்களில் இலாகாப் பரீட்சைகள் மூலம் குமாஸ்தாவாகலாம் என்றும் சொன்னார். சரி என்று அதற்கான முயற்சிகளைச் செய்தேன். சிறிது காலத்துக்குள் நான் தபால்காரராகத் தேர்ந்தெடுக்கப்பட்டேன் என்று தகவல் வந்துவிட்டது. மௌண்ட்ரோட் அஞ்சலகத்துக்கு என்னை ஒதுக்கினார்கள். வந்து சேர்ந்தேன்."

"அது சரி! நீங்கள் எப்படி பி. ஏ. படித்தீர்கள்? உங்கள் அலுவல் நேரத்துக்கும் படிப்புக்கும்...?"

"அது ஒன்றும் சிரமம் இல்லையே! இரவு நேரக் கல்லூரி என் போன்றவர்களுக்காகத் தானே? நான்கு வருடங்கள் அரசினர் கலைக் கல்லூரியில் சேர்ந்து படித்தேன். மாலை ஆறு மணிக்குப் பிறகுதானே வகுப்பு?"

"சரித்திரம், பொருளாதாரம் என்று பாடங்களைத் தேர்ந்தெடுத்துப் படிக்காமல் ஏன் ஆங்கில இலக்கியத்தை எடுத்துப் படித்தீர்கள்?"

"அதைக் கேட்கிறீர்களா? எனக்குப் பள்ளி நாட்களிலிருந்தே ஆங்கில பாஷை அறிவில் தேர்ச்சி பெறுவதில் தனி ஆவல். அதனால் தான் பி. ஏ. வகுப்பில் அந்தப் பாடத்தைத் தேர்ந்தெடுத்தேன்."

இவருக்குக் கல்லூரியில் சம்பளச் சலுகை கிடையாது. ஆகையால் கல்லூரியில் சேர்ந்தவுடன் பெற்றோர்களுக்கு இந்தப் படிப்பு முடியும்வரை பணம் அனுப்ப முடியாது என்று வருத்தத்துடன் எழுதினார். ஆரம்பத்தில் ஆங்கில இலக்கிய வகுப்புக்களில் இவருடைய சக மாணவர்கள் ஆங்கிலம் பேசிய தோரணை இவரை நடுங்க வைத்தது. அடேயப்பா! என்ன அட்டகாசம்! அவர்களில் பலர் பெரிய கம்பெனி ஸ்டெனோகிராபர்கள். பெரிய பதவிகளில் இருப்பவர்கள். இந்தப் படிப்பைத் தொடரலாமா வேண்டாமா என்று கூட யோசித்தார். இந்த நேரத்தில் வகுப்பு முதல் பரீட்சை வந்தது. அதில் இவர் முதல் மார்க் வாங்கி விட்டார். அப்புறம் தைரியமும் வந்தது. தொடர்ந்து படித்து வெற்றி கண்டு பட்டமும் வாங்கி விட்டார்.

"உத்தியோக முறையில் இந்த பி. ஏ. பட்டம் உங்கள் பதவி உயர்வுக்குக் காரணமாக உதவுமா?"

"இல்லை. குமாஸ்தா பதவியை எட்டிப் பிடிக்க நான் இலாகா பரீட்சை எழுதி வெற்றி பெற வேண்டும். அந்த இலாகா பரீட்சைக்கு எட்டாம் வகுப்பு ஞானம் போதும். ஆனால் சென்ற ஆண்டு அந்தப் பரீட்சையில் நான் வெற்றி பெறவில்லை. இந்த ஆண்டு பி. ஏ. பரீட்சையில் வெற்றி பெற்றேன். இதை விதி என்பதா? விசித்திரம் என்பதா?"

"வெளி வேலைகளுக்கு முயற்சி செய்யவில்லையா?"

"எனக்குப் பொதுஜன சேவையும், பொது மக்கள் தொடர்பும் உள்ள இந்த வேலை பிடித்திருக்கிறது. இந்த இலாகாவிலேயே முன்னேற ஆசைப்படுகிறேன். ஆங்கில இலக்கியத்தில் எம். ஏ. பட்டம் பெற எனக்கு ஆசை. எம். ஏ. வகுப்புக்கு இரவுக் கல்லூரி இடையாது. பகல் நேரக் கல்லூரிக்குப் போக என் தபால்கார உத்தியோகம் அனுமதிக்காது. குமாஸ்தாவானால், காரியாலய வேலை நேரத்தை அதிகாலையிலும் இரவிலும் அமைத்துக்கொண்டு கல்லூரிக்குப் போகலாம். அதற்காகவாவது இலாகாப் பரீட்சையில் வெற்றி பெற முயற்சி செய்கிறேன்" என்றார் திரு அமல்ராஜ்.

— பட்டினத்தார்

# சென்ட்ரல் பி.வி.ஆர்

திருமணம் ஒரு ரயில்வே ஜங்ஷனைப்போல -- பல திசைகளில் ரயில் செல்வதுபோல், வாழ்க்கையின் திசையும் மாறுகிறது.

## அத்தியாயம் 13

அபிதம் அறை வாயிலில் நின்று, ''சார்!'' என்று ஒரு தடவை அழைத்தாள். கட்டிலில் சாய்ந்து உட்கார்ந்திருந்த கேதாரமோ, கட்டிலைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்த மணியோ அவளைக் கவனிக்கவில்லை.

'' சார் !'' குரல் அசுருதியுடன் வந்தது.

இப்போது மணி அவளைப் பார்த்தான். ஆதிசேஷன் பெண்ணை அவன் பார்த்திருக்கிறான். ஒரு கோடீசுவரனின் பெண் என்ற வியப்பைவிட, அபிதம் அவன் மனத்தில் எப்போதுமே ஒருவித பரிவையும் கனிவையும்தான் ஏற்படுத்தியிருக்கிறாள். இப்போது அபிதத்தை ரிடயரிங் அறை வாயிலில் பார்த்தபோது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. முந்தின நாள் கேதாரம் அவளைப் 'பெண் பார்த்து'விட்டு வந்திருக்கிறான்.

ஈவு இரக்கமில்லாமல் அவனிடமும், மாமா ஐம்புநாதனிடமும் பெண் பிடிக்கவில்லை என்று சொல்லியிருக்கிறான். கண்டிப்பாக இந்தச் செய்தி ஆதிசேஷன் வீட்டுக்கும் தெரிந்திருக்கும். அவனுடைய நிராகரிப்புக்கான காரணத்தை விசாரிக்க வேண்டும் என்ற எண்ணத்தில்தான் அபிதம் இப்போது இங்கே வந்திருக்கிறாளோ?

எண்ணங்கள் கண் இமைக்கும் நேரத்தில் மணியின் மனத்தில் தோன்றின. எட்டு வயதிலிருந்தே அபிதத்தின் உடலில் ஏதோ கோளாறு. டாக்டர்கள் 'தைராய்டு' என்று ஏதோ சொல்லி என்னென்னவோ மருந்து கொடுத்தார்கள். அபிதம் காட்டுப் புதர்போல் வளர்ந்து விட்டாள். பல வருஷங்கள், தன் உடலின் பக்கவாட்டு வளர்ச்சியை வெளியே காட்ட வெட்கப்பட்டு, அழுகையில் காலம் தள்ளினாள். ஆனால் நாளடைவில் மனத்தின் நோய் உடலின் நோயில் மடிந்து விட்டது. தெய்வம் அவளைத் தண்டித்திருக்கிறது. பூதம் போல் வளர்ந்துவிட்டாள். அதற்காக அவள் எத்தனை நாட்கள்தான் தன்னையே தின்று மாய்த்துக் கொண்டு வீட்டினுள்ளேயே அடைந்து கிடக்க முடியும்? எல்லாப் பெண்களையும்போல் அவளுக்கு வாழ்க்கை இல்லை. கண்டிப்பாக இல்லை. ஆனால் அவள் தன்னிச்சையில் வாழ்வதை 'யாராலும் தடுக்க முடியாது. 'தைராய்டு டிஃபிஷியன்ஸி' என்ற வியாதியை அவள் ஏன் பெருமையுடன் சொல்லிக் கொண்டு, மற்றவர்கள் அவளுடைய பருமனைப் பார்த்துச் சிரிப்பதற்குமுன், அவளே சிரித்துத் தன்னைத் தானே ஆற்றிக் கொள்ளக் கூடாது?

பதினெட்டு வயதில் இப்படி ஒரு விவேகம் பிறந்தபோது, அபிதம் சமூக சேவகி ஆனாள். அப்பா அவளுடைய செலவுக்கு என்று மாதம் ஆயிரம் ரூபாய் கொடுத்தார். அதில் தொள்ளாயிரத்து ஐம்பதை ஏழைகளுக்குச் செலவு செய்தாள். ஏழைப் பெண்களின் பிரசவம், குழந்தைகளுக்கு மருந்து, பெரியவர்களுக்கு மூக்குக் கண்ணாடி என்று பணம் ஓடியது. ஒவ்வொரு தீபாவளி, பொங்கல் தினங்களில் ஆயிரம் லட்டுக்களோ, ஜிலேபிகளோ அனாதை ஆசிரமங்களில் இருக்கும் சிறுவர், சிறுமியருக்கு வழங்கப்பட்டன. அவளே கூடைகளில் போட்டுக் காரில் எடுத்துப் போய் வழங்கினாள்.

அவள் செய்த தர்மங்களில், சேவையில் அவளுக்கு ஆத்ம திருப்தி கிடைப்பதாக முதலிலெல்லாம் எண்ணிக் கொண்டாள். ஆனால் நாள் செல்லச் செல்ல, அவள் தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்ளுவதாகத் தோன்றியது. தன் நெஞ்சின் கண்ணீரைத் துடைத்துக் கொள்ள அவள் இம்மாதிரி ஓர் உபாயத்தைத் தேடுவது சரியல்ல என்று தோன்றியது. ஆனால் இந்த எண்ணம் அவள் மனத்தில் உதயமாவதற்கு முன்பேயே, ஏழைகளின் வாழ்க்கையும் அவர்களின் அவலமும் நெஞ்சைப் பிளந்து விட்டன. லட்சக்கணக்கான சொத்துக்கு வாரிசான அவள் என்ன சுகத்தைக் கண்டு விட்டாள்? ஏழைகளின் ஏழைமையை அவள் ஒருத்தியால் களைந்துவிட முடியாதுதான். இருந்தாலும் ஏதோ அவளால் முடிந்ததைச் செய்தால் அவர்கள் சந்தோஷமாக இருப்பார்களே? மொத்தத்தில் சுயநலத்தில் ஆரம்பித்த தர்மம் பொதுநலத்தில் முடிந்தது.

மணிக்கு அவளைப் பற்றி முழுதும் தெரியும். ஆனால் இப்போது ரிடயரிங் அறைக்கு அவள் வந்திருப்பதன் காரணம்தான் விளங்கவில்லை. அபிதம் கேதாரத்தைத் தேடிக்



கொண்டு வந்திருக்கிறாள். அவன் இருந்தால் விஷயத்தை வெளிப்படையாகப் பேசமாட்டாள். அப்புறம், அவன் திரும்பிச் சென்ற பிறகு கேதாரத்தின் மூலமே சமாசாரத்தைத் தெரிந்து கொள்ளலாம்.

''கேதாரம்! நான் கிளம்புகிறேன்'' என்றான் மணி.

கேதாரம் இன்னும் அபிதத்தைக் கவனிக்கவில்லை.

''எங்கேடா, போகிறாய்? எனக்கு 'போர்' அடிக்கிறது.''

''உன்னைத் தேடிக் கொண்டு யார் வந்திருக்கிறார்கள் என்று பார்! நீ பேசிக் கொண்டிரு. நான் வருகிறேன்'' என்று சொல்லிவிட்டு, மணி பதிலுக்குக் காத்திராமல் புறப்பட்டான்.

அறை வாசலில் அபிதம் ஒதுங்கி வழிவிட்டாள். ''தாங்க் யூ மிஸ் அபிதம். உங்களை எனக்குத் தெரியும்; எத்தனையோ ஏழைகள் உங்களை வாழ்த்துகிறார்கள்!''

கேதாரம் திடுக்கிட்டான். அபிதம் எதற்காக இங்கே வந்திருக்கிறாள்? யார் அவளை அனுப்பியிருக்கிறார்கள்? ஒருவேளை, இது மாமாவின் சூழ்ச்சியோ?

''குட்மார்னிங். உள்ளே வரலாமா?'' என்று அபிதம் தன் கட்டைத் தொண்டையில் கேட்டாள்.

''ஓ, பேஷா! உள்ளே வரலாம்!''

''என்னை இங்கே பார்க்கிற போது உங்க மனசிலே திகைப்பு, ஆச்சரியம், பயம் எல்லாம் உண்டாகின்றன, இல்லையா?''

''இல்லே! இல்லே! அதெல்லாம் இல்லை.... வெறும் ஆச்சரியம் மட்டும் தான்.... தயை செய்து உட்காருங்கள். காப்பி கொண்டு வரச் சொல்லுகிறேன்......''

''இல்லே. வேண்டாம். வீட்டிலே டிபன் காப்பி சாப்பிட்டுவிட்டுத்தான் கிளம்பினேன்.''

''உட்காருங்கள்.''

அபிதம் உட்கார்ந்தாள். கேதாரத்தை விட்டு விட்டு, அறையை ஒரு நோட்டம் விட்டாள். பாண்ட், ஷர்ட், வேஷ்டி தாறுமாறாக அங்குமிங்கும் சிதறிக் கிடந்தன. காலையில் ஏற்றின விளக்கு இன்னும் எரிந்து கொண்டிருந்தது. அபிதம் எழுந்து போய் அணைத்தாள். மேஜையின் கீழே இரண்டு மூன்று பத்திரிகைகள் கிடந்தன. எடுத்து மேஜையின் மேல் வைத்தாள். ஷேவிங் செட், பிரஷ் ஓர் இடம், சோப் ஓர் இடம் என்று கிடந்தன.

கேதாரத்தை அவமானம் பிடுங்கித் தின்றது. அதுவே அபிதத்தின் மேல் கோபமாகவும் எழுந்தது. ஆனால் கோபத்தைக் காட்ட முடியாமல் திணறினான். ''இது கட்டைப் பிரம்மச்சாரி தங்கியிருக்கும் அறை!'' என்றான்.

அபிதம் புன்முறுவல் செய்தாள். பிறகு, ''உங்க மாமாதான் துடியாய்த் துடிக்கிறாரே, உங்களுக்கு இதிலிருந்து விமோசனம் வாங்கித் தர'' என்றாள்.

''ஆமாம்.''

''நேத்து ராத்திரி, அவருக்கு எங்கள் வீட்டில் ராஜ உபசாரம். அப்பாவுக்கும் அம்மாவுக்கும் வைகுண்டம் போய்த் திரும்பி வந்த மாதிரி ஒரு சந்தோஷம்..... நான் ராத்திரி தூங்கவேயில்லை....''

கேதாரத்தின் உடல் ஆத்திரத்தில் கொதித்தது. பரபரப்புடன் கேட்டான். ''மாமா என்ன சொன்னார்?''

''நீங்கள் சொல்லி அனுப்பியதைத் தான் மிஸ்டர் கேதாரம்... உங்களுக்காக நான் மிகவும் வருந்துகிறேன்!''

''நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?'' கேதாரம் விழித்தான்.

''நீங்கள் படித்தவர். என்ஜினீயர். அதிகாரி. ஆனால் எத்தனையோ பேரைப் போல....'' அபிதம் திடீரென்று நிறுத்தினாள்.

'' எத்தனையோ பேரைப் போல் என்ன செய்து விட்டேன்?''

''என்னைப் பெண் பார்க்க வந்தீர்கள். எனக்கு விருப்பமே இல்லை. ஆனால் அம்மா அழுதாள். அப்பா கெஞ்சினார். சரி, என் உடம்பை, உடம்பின் பருமனைப் பார்க்கத்தானே ஒருவன் வருகிறான் என்று சம்மதித்தேன். இதற்கு முன் யாரையும் அனுமதிக்கவில்லை, என்னைப் பெண் பார்க்க. உங்கள் படிப்பு, பதவி இதையெல்லாம் தெரிந்து கொண்ட போது எனக்குத் தைரியம் வந்தது. சரி என்றேன்.''

''தைரியமா?''

''ஆமாம், தைரியம்தான். இளம் வயதில் ஆயிரம் ரூபாய்க்கு மேல் சம்பளம் வாங்குகிற ஒருவர், ஓர் அழகான, பாந்தமான பெண்ணைத்தான் கலியாணம் செய்து கொள்ள விரும்புவார். என்னைப் போன்ற ஒரு பூசணிக்காயைப் பார்த்ததும் அரண்டு மிரண்டு ஓடிவிடுவார் என்று கணக்குப் போட்டேன். சரி என்றேன். நீங்கள் என்னடா என்றால்....''

கேதாரத்துக்கு விஷயம் ஒருவாறு புரிந்து விட்டது. மாமா ஜம்புநாதன் சூழ்ச்சி செய்திருக்கிறார். இப்போது அபிதத்திடமே, 'எனக்கு உன்னைப் பிடித்தது என்று நான் என் மாமாவிடம் சொல்லவில்லை' என்று எப்படிச் சொல்லுவது? அவன் வார்த்தைகளைத் தேடினான். அவை அவன் மனத்தை விட்டு விலகி எங்கோ ஒளிந்து கொண்டன.

'' என்னைக் கலியாணம் பண்ணிக் கொள்ளுவதனால், நீங்கள் என் அப்பாவின் கம்பெனியில் டைரக்டர் ஆகலாம். எனக்கு வரக்கூடிய சொத்தை ஆண்டு அனுபவிக்கலாம். ஆனால், தாம்பத்தியம் என்று ஒன்று இருக்கிறதே, அது கிடைக்குமா? இதைப் பற்றி ஏன் நீங்கள் யோசனை செய்யவில்லை என்பது எனக்கு இன்னும் புரியவில்லை...''

''மிஸ் அபிதம்.... நீங்கள் என்னைப் புரிந்து கொள்ளவில்லை.''

''அப்படியானால் நான் மன்னிப்புக் கேட்கத் தயார். பணத்துக்காகச் சம்மதிக்கவில்லை என்றால் எதற்காக? மாமாவுக்காகவா? அல்லது என் அப்பா உங்களை வற்புறுத்தினாரா?''

''இல்லே, இல்லே!'' கேதாரம் தலைமயிரைப் பிய்த்துக் கொண்டான்.

''இதெல்லாம் காரணம் இல்லை என்றால், வேறு இரண்டே இரண்டு காரணங்கள்தான் இருக்க முடியும். ஒன்று, நீங்கள் வேறு யாரையாவது காதலித்து அதில் தோல்வி அடைந்து, விரக்தியில் இனி யார் மனைவியாக வாய்த்தால்

# அற்புதமான சூப்பர் டஸ்ட்!

அருமையான டீ!







உயரிய சுவை. மேன்மையான
டிகாக்ஷன். முற்றிலும்
உயர்ந்த தேநீரின் திருப்தியை
உங்களுக்குத் தருவது
ப்ரூக் பாண்ட் சூப்பர் டஸ்ட்.
அருந்தி ஆனந்தமடையுங்கள்.

BB 6593

# தேசத்தை முன்னேற்றப்பாதையில் இயக்கிச் செல்லும் சக்கரங்கள்

சக்கரங்கள் பல தொழில்களை இயக்குகின்றன. உதாரணமாக, ரயில்கள் கிராமங்களையும் நகரங்களையும் இணைக்கின்றன; விற்பனைச்சரக்குகளை மார்க்கெட்டுகளுடன் இணைக்கின்றன; நாட்டின் ஒவ்வொரு பகுதியையும் மற்றப் பகுதிகளுடன் இணைக்கின்றன டாடாவின் தண்டவாளங்கள், எஃகுச்சக்கரங்கள் மற்றும் ஆக்ஸில்கள் மக்களையும், பொருள்களையும் இப்பரந்த நாட்டின் பல்வேறு இடங்களுக்கும் கடத்திச் செல்லுகின்றன.

நாட்டின் முன்னேற்றத்திற்கான இணைப்புத் துறையில் எஃகு ஈடற்ற முக்கியத்துவம் வகிக்கிறது. உறுதியான உழைப்பு, உபயோகம் மற்றும் பணமுதலீட்டின் முழு மதிப்பையும் கிடைக்க வழி செய்வதில் அது ஈடு இணையற்றது.

அக்காரணத்தினால்தான் நாங்கள் ஏராளமான நேரம், உழைப்பு மற்றும் பணம் இவற்றை டாடாவின் முத்திரையுள்ள பொருள்களை மேலும் மேலும் சீராக்குவதில் செலவிடுகிறோம்.

இந்தியப் பொருளாதாரத்தை சீராக்க ஊக்கமளிப்பது டாடா ஸ்டீல்.

**டாடா ஸ்டீல்**





காமிராமேன் : நம்ம காமிராவை மாத்தணும் சார்!
டைரெக்டர் : ஏன்?
காமிராமேன் : இப்போ இருக்கிற காமிரா நம் கதாநாயகிக்கு ஏற்ற முக வெட்டுள்ளதாக இல்லே.



''பேஷ்! போட்டி ஆரம்ப மானதும் வேடிக்கையைப் பாரேன்!''



''அடி கமலம்! சட்டுன்னு வா! நான் கவனிக்கவே இல்லே. நம்ம நரைக்க ஆரம்பிச்ச விட்டதும!''

என்ன என்று முடிவுகட்டியிருப்பீர்கள். இல்லையென்றால்....''

''தயவுசெய்து... தயவுசெய்து....'' கேதாரத்துக்கு அழுகை வந்தது.

அபீதம் அவனை லட்சியம் செய்ய வில்லை. தொடர்ந்தாள்:

'' என் மீது உங்களுக்கு இரக்கம் பிறந்திருக்கும். எனக்கு வாழ்வளிக்க வேண்டும் என்ற தியாக உணர்ச்சி. ஆனால் தியாகத்தின் அடிப்படையில் உருவாகும் தாம்பத்தியம் உருப்படுவதே இடையாது. என் வாழ்நாள் முழுதும் நான் உங்களுக்குக் கடமைப்பட்டவ ளாகவே இருக்க வேண்டும்.''

அபீதம் பேசி முடித்ததும், அவ ளுடைய வார்த்தைகளின் எதிரொலி அடங்கியதும் அமைதி நிலவியது.

கேதாரம் எழுந்து வெளியே சென் றான். ஒரு சிப்பந்தி எதிர்ப்படவே, ''ஒரு பாட் காப்பி, பிஸ்கட்ஸும்கூட எடுத்து வா!'' என்று அவனிடம் சொல்லி விட்டுத் திரும்பினான்.

அபீதத்தைப் பார்த்தான். அவள் 'ஹிந்து'வைப் புரட்டிக் கொண்டிருந் தாள். செக்கச் செவேலென்ற முகம். குழந்தையின் முகத்தில் மிளிரும் களங்க மற்ற உள்ளத்தின் ஒளி. கன்னத்துச் சதை தொங்கினாலும், நிறத்தின் சோபையில் அது அழகாகத் தோன் றியது. அவளுக்கு அவளுடைய உடம்பே ஒரு பாரமாகத் தோன்றுவது போல் காணப்பட்டாள்.

'' நான் என் மாமாவைப் பார்த் துப் பேச வேண்டும்.''

''நீங்கள் உங்கள் முடிவை மாற் றிக் கொண்டால், நான் என்றென் றும் உங்களுக்குக் கடமைப்பட்டவளாக இருப்பேன். உங்கள் யௌவனத்துக் கும், படிப்பு பதவிக்கும் ஏற்றபடி, அழ கான பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ளுங்கள். பணத்தால் கிடைக்கக் கூடிய சுக வாழ்க்கைக்காக, தாம்பத் தியத்தை, அதன் தெய்விகத்தை, அதன் நிம்மதியைக் குலைத்துக்கொள்ளா தீர்கள். உங்களுக்கு வேறு எந்தவிதத்தி லும் உதவ நான் தயார்....''

''மிஸ் அபீதம்!''

''மிஸ்ஸஸ் அபீதம் கேதாரம் என்று என் பெயரை மாற்ற நீங்கள் சம்ம தித்திருக்கிறீர்கள். ஆனால் அந்தப் பெயரே, 'மிஸ்ஸஸ்'என்ற வார்த்தையே எனக்கு நாராசமாக இருக்கிறது.''

'' மிஸ் அபீதம்... எனக்கு என்ன சொல்லுவது என்றே புரியவில்லை.''

''என்னிடம் சொல்ல வேண்டாம். இப்போ என் அப்பா தொழிற்சாலையில் இருப்பார். பத்து மணிக்கு லிங்கிச் செட்டித் தெருவில் ஆபீஸில் இருப்பார். அவருக்கு ஒரு போன்.... போனில் ஒரே வார்த்தை.... எனக்கும் விடுதலை.... உங்களுக்கும் விடுதலை......''

காப்பியும் பிஸ்கட்டும் வந்தன.

''சாப்பிடுங்கள்.''

''சாப்பிடுகிறேன். உங்கள் முடிவை மாற்றிக் கொள்ளுகிறீர்களா?''

''இப்படிக் கேட்டால் நான் எப்படிப் பதில் சொல்லுவேன்?''

''நான் என் அம்மா அப்பாவிடம் கண்டிப்பாக, உங்களைக் கலியாணம் செய்து கொள்ள முடியாது என்று சொல்லியாகி விட்டது. ஆனால் உங்கள் சம்மதத்தை உங்கள் மாமா சொன்னதி லிருந்து, அவர்கள் கலியாணத்தைப் பத்துப் பதினைந்து நாட்களில் நடத்தி விட வேண்டும் என்று பறக்கிறார்கள்.''

''இந்தக் கலியாணம் நடக்கக்கூடாது என்கிறீர்கள், இல்லையா மிஸ் அபீதம்?''

''ஆமாம்!''

"ஏன்?"

"நான் ஒருவருக்கு மனைவியாக இருக்க லாயக்கில்லே."

"நான் அதை ஒப்ப மாட்டேன். கல்யாணமானபின், ஒல்லியாக இருந்த பெண்கள் எத்தனையோ பேர் குண்டாக மாறிவிடுகிறார்கள்."

"இருக்கலாம். ஆனால் நான் என்னிக்குமே இளைக்க முடியாது.... நெஞ்சைத் தொட்டுச் சொல்லுங்கள், என்னை உங்கள் மனைவி என்று நாலு பேரிடம் அறிமுகம் செய்து வைக்கத் துணிவு இருக்கிறதா?"

கேதாரம் மௌனம் சாதித்தான்.

"பார்த்தீர்களா?.... வாயால் உண்டு இல்லே என்று சொல்லவே உங்களுக்குத் துணிவு இல்லே."

அபிதம், வாயில் போட்ட பிஸ்கட் கரைந்து மாவாகித் தொண்டையில் இறங்குவதற்கு முன்பேயே, காப்பியைக் குடிக்கலானாள்.

எத்தனையோ பேர்களுக்குச் சிலை எழுப்புகிறார்களே, இந்த அபிதத்துக்கு ஏன் எழுப்பக் கூடாது என்று கேதாரம் தன்னைத் தானே கேட்டுக் கொண்டு, காப்பியை எடுத்தான்.

அதே சமயத்தில் போர்ட்டர் சீனன் உள்ளே நுழைந்தான்.

"வணக்கமுங்க...." கேதாரம் ஏறிட்டுப் பார்த்தான்.

நெற்றியில் பளபளத்த விபூதியும், மின்னின குங்குமமும் அவனை அமர வைத்தன.

"என்னப்பா, வேணும்?"

"எஸ். எஸ். வீட்டுக்குச் சரியா பத்தரை மணிக்கு வருவீங்களா....?"

"பதினொரு மணிக்கு."

"சரிங்க."

"எதுக்குக் கேட்கிறே?"

"எஸ். எஸ்.ஸுக்குச் சந்தேகம் வந்துடுத்துங்க...அதான் வந்தேன்."

"பதினொரு மணிக்கு."

"நல்லதுங்க.... ஒரு ரூபா சில்லறை இருக்குமா....? இன்னும் நாஸ்தா பண்ணலே...."

கேதாரம் ஒரு கணம்தான் தயங்கினான். 'இல்லே' என்றால், அபிதம் அவனை மட்டமாக எடை போடுவாள். உடனே கொடுத்தால் அவனைப் பற்றி ஏதாவது சந்தேகம் வந்தாலும் வரும். என்ன செய்வது?

"சில்லறை நோட்டாக இல்லே....."

"மாத்திக் கொண்டு வர்றேனுங்க."

"அப்புறமா வா..."

அநாவசியமாக ஒரு ரூபாயை இழக்கக் கேதாரத்துக்கு மனம் வரவில்லை.

"சரிங்க.... இன்னும் நாஸ்தா பண்ணலே!"

அபிதம் பேச்சில் குறுக்கிடவில்லை. 'ஹிந்து'வில் மூழ்கினாள்.

அவன் போனதும், "யார் எஸ்.எஸ்,? மிஸ்டர் கணபதிதானே?" என்று அவள் கேட்டாள்.

"ஆமாம்."

"அவர் பெண் மங்களாவை உங்களுக்குத் தெரியுமா ?"

"ஒரு மாதிரியாக...."

"அவளும் நானும் ஒரே கல்லூரியில் படித்தவர்கள்.... பாட்மிண்டன் சாம்பியன்... நாடகத்திலே நன்னா 'ஆக்ட்' பண்ணுவாள்."

"இந்த விவரமெல்லாம் தெரியாது."

"ரொம்பத் துடுக்கு. சிரிச்சுச் சிரிச்சு, வெட்டி வெட்டிப் பேசுவாள்.... எனக்கு ஒரு வருஷம் ஸீனியர்."

"அப்படியா ?"

"ஆனால் அவளுடன் நான் பழகினதில்லே. சொல்லப்போனால் அவள் என்னை மதித்ததுகூட இல்லே.... இவ்வளவுக்கும் கல்லூரி நாடகத்துக்கு எங்கள் பணம்தான் அதிகம் செலவாகும்."

"கர்வியோ ?"

"இல்லே. இல்லே. அவள் போக்கு. ரொம்பப் பேர் அவளைச் சூழ்ந்து கொள்ளுவார்கள்.... கர்வியானால் அண்டுவார்களா? ரேணுகான்னு ஒரு சிநேகிதி... அவள்தான் இவளுக்கு ரொம்ப நெருங்கிய... இப்போ எங்கே இருக்கிறாளோ.....?"

"பம்பாயில்."

"உங்களுக்குத் தெரியுமா?" என்று அபிதம் ஆச்சரியத்துடன் கேட்டாள்.

"ஒரு தடவை சந்தித்திருக்கிறேன். இன்னும் இரண்டு நாட்களில் அவள் வருகிறாள்."

"அப்படியா ?"

"மங்களாவுடன்தான் ரேணுகா தங்கப் போகிறாள்."

"ரொம்ப நல்லதாகப் போச்சு ! ஆமாம் ! ரொம்பத் தெரிந்து வைத்திருக்கிறீர்களே ?"

பம்பாயில் ரேணுகாவைச் சந்தித்ததையும் அவள் சொன்னதையும் கேதாரம் விவரமாகச் சொன்னான்.

"எனக்கு ஒரு சின்ன உதவி பண்ணுவீர்களா ?"

"ஓ, ஆகட்டும் !"

"ரேணுகா வந்ததும் எனக்கு போன் பண்ணுங்கள். நான் உடனே வந்து பார்க்கிறேன்."

"ஆகட்டும். எனக்கும் ஒரு சின்ன உதவி....!"

"சொல்லுங்கள் !"

''என் மாமா ஜம்புநாதன் இனிமேல் உங்க வீட்டில்தான் பழியாகக் கிடப்பார். அவரை நான் உடனடியாகச் சந்திக்கணும்.''

''வரச் சொல்லுகிறேன்.''

''சாதாரணமாகச் சொன்னால் வர மாட்டார். நீங்கள் இங்கே வந்த விவரத்தைச் சொல்லுங்கள்.... அது போதும்... அடித்துக் கட்டிக் கொண்டு ஓடி வருவார்.''

'' அவர் இங்கே எப்போ வர வேண்டும் ?''

''இரண்டு மணிக்கு.''

''நானே காரில் கொண்டு வந்துவிட்டுப் போகிறேன். நீங்கள் கவலைப்பட வேண்டாம் !''

''ரொம்ப தாங்க்ஸ், மிஸ் அபிதம்.''

''நாம ரெண்டு பேரும் இப்போ தெரிந்தவர்களாகப் போய்விட்டோம். நண்பர்களாக இருப்பதுதான் நல்லது... இல்லியா ?''

''ஆமாம்! நீங்க சொல்வது ரொம்ப சரி !''

''நான் வரேன்.''

'' குட் லக் !''

''தாங்க்ஸ்.''

அபிதம் எழுந்து மெதுவாக நடந்து சென்றாள்.

அவளுக்காக மனத்தில் கண்ணீர் சிந்திக் கொண்டு கேதாரம் வெகு நேரம் கட்டிலிலேயே கிடந்தான். (தொடரும்)

---




## இசைமணியின் பக்திப் பாடல்

பக்திப் பாடல்கள் பாடுவதில் வித்தகராக விளங்கும் இசைமணி சீர்காழி கோவிந்தராஜன் அவர்கள் இசைத்தட்டில் பாடியுள்ள பக்திப்பாடல்களையெல்லாம்தொகுத்து ஒரு நூலாக வெளியிட்டிருக்கிறார்கள் ஞான சிவம் பதிப்பகத்தார். இசைமணியின் இசைக்குத் தலையசைக்காத ரசிகர்களே இருக்கமாட்டார்கள் என்று சொல்லலாம். அகங்கனிந்து உருகி, ஆண்டவனோடு ஒன்றுபட்டுப் பக்திச் சுவை நனி சொட்டச் சொட்ட, திரு சீர்காழி கோவிந்தராஜன் பாடும் பக்திப் பனுவல்கள் என்றும் இறவாப் புகழ்பெற்றவை. தற்காலக் கவிஞர்கள் பலருடைய பக்திப் பாடல்களைப் பாடியிருப்பதோடு இறைவன் திருவருட் செல்வர்களான ஆழ்வார், நாயன்மார் அருணகிரிநாதர், சுவாமி ராமலிங்கப் பெருமான் ஆகியவர்களின் தெய்விகப் பாடல்களையும் உளம் உருகிப் பாடி இசைத்தட்டில் பதிவுசெய்திருக்கிறார் இசைமணி. பக்தியுள்ளமும், இசை ஞானமும் உள்ளவர்கள் அகங்கனிந்து பாடி ஆனந்த அநுபவம் பெற வாய்ப்பளிக்கும் அரிய நூல். திருமுருக கிருபானந்த வாரியார், டாக்டர் மு. வரதராஜன் திரைப்பட இயக்குநர் திரு ஏ. பி. நாகராஜன் ஆகியவர்கள் இந்நூலுக்கு அணிந்துரை புனைந்து அளித்திருப்பதே தக்கநற்சான்றாகும்.

பிரசுரம்: ஞானசிவம் வெளியீடு, இசை இல்லம், 4, எட்டாவது டிரஸ்ட் கிராஸ்தெரு, சென்னை - 28. விலை: ரூ. 4—50.

## ராணி வேலுநாச்சி

பாரத தேசத்தில் விடுதலைப் போராட்டத்தில் பங்கு பற்றி உயிர்த் தியாகம் புரிந்திடத் தயங்காத வீரபுருஷர்களின் வரிசையில் வீராங்கனைகளும் இடம் பெற்றிருக்கின்றனர். அவர்களுள் வீரம் விளைந்த தமிழ் மண்ணில் பிறந்து தமிழர் மரபு காக்கவும், தமிழர் மானம் காக்கவும், தமிழர் வாழ்வைக் காக்கவும், கடைசியாகத் தமிழ் இனத்தையே காக்கவும், ஆதிக்க வெறியாட்டத்தை எதிர்த்து முதல் முழக்கம் செய்த வீரப் பெண்மணி ராணி வேலு நாச்சி.

''இந்தியாவின் சுதந்திரத்துக்கு வித்திட்ட முதல் கதாநாயகி ஜான்ஸி ராணி என்று பலரும் பேசுகின்றனர்; கொண்டாடவும் செய்கின்றனர். ஆனால் முதல் கதாநாயகி தமிழகத்தில் பிறந்த வேலு நாச்சி என்ற உண்மை பலருக்குத் தெரிந்தும் ஏனோ மறைத்து விட்டனர். இந்தப் பொருமல் நீண்ட நாட்களாகவே என்னுடைய நெஞ்சில் அலைமோதிக் கொண்டிருந்தது. அதன் பலனாக எழுந்த நாவல்தான் இது....'' என்ற ஆசிரியரின் முன்னுரைக் கூற்றை நினைவில் வைத்துக் கொண்டு இந்நூலைப் படித்தால் அவர் உள்ளப் பொருமல் இதை உருவாக்குவதற்கு உறுதுணையாக இருந்திருக்கிறது என்பது தெள்ளிதிற் புலனாகும். வரலாற்றுச் சான்றுகள் சிலவற்றை வைத்துக் கொண்டு இந்நவினத்தைச் செந்தமிழ் வசன காவியமாகப் புனைந்து தந்திருக்கிறார் இந்நூலாசிரியர். வீராங்கனையின் கதைக்கேற்ற வீறு கொண்ட தனித் தமிழ் நடை தமிழ் ஆர்வம் கொண்டவர்களின் ஆவலைத் தூண்டும் வண்ணம் அமைந்திருப்பது இந்நாலின் தனிச் சிறப்பு. இவ்வரலாற்றைப் புனைய இந்நூலாசிரியர் பல பழம் பாடல்கள், அரசாங்கக் குறிப்புகள் ஆகியவற்றை ஆராய்ந்திருக்கிறார்.

விறுவிறுப்பாக ஓடும் இந்நாவல் தமிழ் வரலாற்றுத் துறைக்கு ஒரு சேவை என்று கூறலாம்.

ஆசிரியர்: கோவி. மணிசேகரன், பிரசுரம்: வானதி பதிப்பகம், தியாகராய நகர், சென்னை-17; விலை: ரூ. 10—00




★ இதழில் வெளியாகும் ரூ. 15/- பரிசு பெறுகிறது.

★ இந்திய ரயில்வே போர்டின் சேர்மன் திரு கங்குலி அவர்கள் சுற்றுப் பயணம் மேற்கொண்டிருக்கும் போது — அதைத் தடுக்கும் பொருட்டு அவர் இருந்த ரயில் பெட்டி தனியாகக் கழற்றப்பட்டுள்ளது. 'இது தமக்குப் பெரும் இழிவை உண்டாக்கி விட்டது' என்று கூறி திரு கங்குலி பெட்டியி லிருந்து இறங்க மறுத்திருக்கிறார். அவர் மீது நடவடிக்கை எடுக்க விரும்பியிருந்தால் சரி யான முறையில் செய்திருக்கலாம். அதை விட்டு அநாகரிகமான முறையில் நடந்து கொண்டதுடன், அவரது பொறுப்புக்களைச் சக உறுப்பினர்களுக்குப் பகிர்ந்து கொடுத் துள்ளார் அமைச்சர். திரு ஹனுமந்தையா நடந்து கொண்ட முறை சிறுபிள்ளைத்தன மானது.

ரயில்வே போர்டின் தலைவருக்கே இந்தக் கதி என்றால் மற்ற அரசு ஊழியர்களைப் பற்றிக் கேட்கவே வேண்டாம்.

ஜனநாயகத்தில் அமைச்சர்கள் இன்று வரு வார்கள். நாளை மக்களால் பதவியிலிருந்து நீக்கப்பட்டுப் போவார்கள்; அரசு ஊழி யர்களே நிரந்தரமானவர்கள். ஆனால் இந்தியாவில் இந்நிலை தலைகீழாக மாறிவிட் டது. அதனால்தான் அரசாங்க அதிகாரிகள் அமைச்சர்களின் கைப் பாவைகளாக மாற வேண்டிய பரிதாப நிலையைக் காண்கிறோம்.

நீலகிரி,
12–10–71 இளவேந்தன் கோபாலன்

சென்ற இதழ் (10–10–71) கல்கியில் ''ஹாக்கி அண்ணனும் கிரிக்கெட் தம்பியும்'' என்ற கட்டுரையில் ''ரோமிலும் டோக்கி யோவிலும் பாகிஸ்தானிடம் பதவியைத் துறந்தீங்க'' என்ற வாசகம் காணப்படுகிறது. இது, ''ரோமிலும் பாங்காக்கிலும்'' என்று இருக்க வேண்டும்.

மணத்தட்டை,
7–10–71 பி. ராஜு

என் சகோதரியின் கணவர் ஓர் ஓய்வு பெற்ற அரசாங்க ஊழியர். யாரும் எதிர் பாரா வண்ணம் இருதய மாரடைப்பின் காரண மாகக் கடந்த ஏப்ரல் 18ந் தேதி இறைவன் இருவடி எய்தினார். அவர் நீண்ட காலமாக இங்கும், மற்றும் தென்னிந்தியாவில் சென்னை, தஞ்சை, குடந்தை ஆகிய இடங்களிலும் சில தேசிய மயமாக்கப்பட்டுள்ள பாங்குகளில் சேமிப்பு நிதியிலும், பிக்ஸட் டிபாசிட்டுகளி லும் தமது குமாரத்தியின் படிப்புக்கும், திரு மணத்தை முன்னிட்டும் தமது சேமிப்புக்களை டிபாசிட் செய்து வைத்திருந்தார். அவர் காலமாகிவிடவே, அத்தொகைகளைப் பெற உரிமை கொண்ட என் சகோதரி சம்பந்தப் பட்ட பாங்கு அதிகாரிகளுடன் எழுத்துமூலம் கடந்த மூன்றரை மாதங்களாகத் தொடர்பு கொண்டு சேமிப்பு நிதியில் உள்ள தொகை களைத் தன் பெயருக்கு மாற்றிவிடும்படியும் அல்லது தொகைகளைத் திருப்பிவிடும்படியும் தக்க ஆதாரங்களுடனும் மற்றும் தேவையான அத் தாட்சிகளுடனும் விண் ணப்பித்தும் இதுநாள் வரை யாரும் இவ்விஷய மாக அக்கறை எடுத்துக் கொண்டதாகவோ அல் லது ஆவன ஏதும் செய்த தாகவோ தெரியவில்லை.

தனிப்பட்டவர்கள் திறம்பட நடத்தி வந்த பாங்குகளை இந்த அர சாங்கம் தேசிய மயமாக் கி சேமிப்பு நிதியில் செலுத்திய பணத்தை உரிய சமயத்தில் உரியவர் பெற வழியில்லாத நிலையை ஏற்படுத்தியுள்ளனர். என் சகோதரி போன்று இதுமாதிரி அவதியுறுபவர்கள் எத்தனை பேரோ?

நாகபுரி,
4–8–71 ராஜகோபாலன்

இ.எஸ்.ஐ. ஆஸ்பத்திரிகளும், அரசாங்க ஆஸ்பத்திரிகளும் இயங்கும் லட்சணமே லட்ச ணம்! இ. எஸ். ஐ.க்கென்று மாதா மாதம் பணம் வேறு எடுத்துக் கொள்கிறார்கள். சமீ பத்தில் திரு வஜ்ரப்பா என்ற தொழிலாளி தவறிப் போய்க் குண்டூசியை விழுங்க, அது தொண்டையில் சிக்கிக் கொண்டு இ. எஸ். ஐ. தலைமை ஆசுபத்திரிக்கு ஓடினார். ஆபரேஷன் செய்ய வசதியில்லை, அரசாங்க ஆசுபத் திரிக்குச் செல்ல வேண்டும் என்று கூறிவிட் டார்கள். பாவம், பெங்களூர் அரசாங்க ஆசுபத்திரியில் இரவு ஏழு மணியாகிவிட்ட தால் சர்ஜன்களோ, 'எக்ஸ்ரே' இயக்குப வரோ இல்லை. 'டியூட்டி'யிலிருந்த குட்டி டாக்டர் ஒருவர், ''குண்டூசிதானே மாட்டிக் கொண்டிருக்கிறது, அவ்வளவாக வலிக் காது!'' என்றார். 'நாளை காலை பத்து மணிக்கு வாருங்கள்' என்று அனுப்பிவிட்டார்! எப்படியிருக்கிறது கதை? பாவம், வஜ்ரப்பா! ஏதோ ஒரு தனியார் நர்ஸிங் ஹோமில் இருநூறு ரூபாய் செலவு செய்து, குண்டூசியை வெளியே எடுக்கும்படியாகி விட்டது.

பெங்களூர்
22–9–71 எஸ். நடராசன்




# பணத்தின் மணம்

குட்டி கிருஷ்ணன்

**ப**ளிச்சிடும் புத்தம் புதிய நோட்டுக்களைப் போன்று அன்று பலபலவென்று பொழுது விடிந்தது. போ படுக்கையை விட்டு எழுந்த போது இவ்வாறுதான் எண்ணினான். நேற்று இரவு சுமார், பதினொன்றரை மணி வரை தன் உடல் மீது மனைவி சரளாவின் கரம் கொடியெனச் சுற்றிக் கொள்வதையும் பொருட்படுத்தாமல் அவன் யோசித்து யோசித்துக் கடைசியில் ஒரு தீர்மானமான முடிவுக்கு வந்து விட்டான். அதன் விளைவாகத்தான் இன்று காலையானது அத்தனை பணக்கார நேரமாகி விட்டது!

சரளா காப்பியை ஆற்றியபடியே அருகில் வந்து நின்றாள். வழக்கமாக அந்த வாசனையை

நீள ஒருமுறை உள்ளுக்கிழுத்து விட்டுப் போய் அவசரம் அவசரமாக வாய் கொப்பளித்துவிட்டு வருவான் போ. ஆனால் இன்று என்னவோ அந்த மணம் அவனை அவ்வளவாக ஈர்க்கவில்லை. சரளா என்னதான் நன்றாகக் காப்பி போட்டாலும் அந்த வாசனை பணத்தின் மணத்துக்கு ஈடாகுமா ?

நீங்கள் புத்தம் புதிய நோட்டுக் கட்டை முகர்ந்து பார்த்ததுண்டா? போவுக்கு அந்த வாய்ப்பு ஒரே ஒரு தடவை கிட்டியது. ஒரு ரூபாய் நோட்டுக் கட்டு, ஒன்று. கனமாக ரூபாய் நூறு. புத்தம் புதிதாக, பிரிக்கப்படாத கட்டாக, முழுசாக அவனுக்கு ஒரு தடவை கிடைத்தது. சீட்டுக் கட்டை இரண்டாகப் பிரித்துத் தரையில் ஊன்றி, கட்டைவிரலால் மேலே ஒரு பக்கத்தைத் தூக்கி விர்ரென்று விட்டுக் கலைப்பதைப் பார்த்திருப்பீர்களே; அதே போல் இவனும் ஒரு ரூபாய் நோட்டுக் கட்டை முகத்துக்கெதிரே வைத்துக் கொண்டு வளைத்து விர்ரென்று ஓசை எழும்ப விட்டான். பணத்தின் மணம் கும்மென்று மூக்கில் ஏறியது.

அந்தக் கணத்தில் போ முடிவு கட்டினான்: உலகிலேயே பணத்தின் மணத்துக்கு ஈடானது வேறொன்றுமில்லை ! புதிய நோட்டுக்களாகத்தான் இருக்க வேண்டும் என்பதில்லை. பழைய பழைய நோட்டானாலும் சரி, 'பணத்தின் மணம் அலாதிதான். கள்ளில் பழங்கள்ளுக்குத்தான் மவுசு அதிகம். மேநாட்டில் சில பெரிய உணவு விடுதிகளில் ஒயினைக் கோப்பையில் விடுவதற்குமுன் லேபிளில் உள்ள வருஷத்தைக் காட்டுவார்களாம்! அதே போல் நோட்டு எத்தனை பழசானாலும் என்ன? செல்லுகிற நோட்டானால் சரி......

''என்ன பலமான யோசனை?'' என்றாள் சரளா.

''ஒன்றுமில்லையே.''

''அப்படின்னு என்னவோ நிச்சயமாக இருக்குன்னு அர்த்தம்.''

''சேச்சே! அதெல்லாம் ஒண்ணுமில்லே.''

''புளுகறேள். நேற்று ராத்திரி நீங்க ரொம்ப நேரம் தூங்கவேயில்லே. பக்கத்தில் படுத்திண்டிருந்த என்னையும் லட்சியம் பண்ணாமல் தூக்கமும் பிடிக்காமல் படுத்திண்டிருந்தால் என்ன அர்த்தம்?''

'' என்ன அர்த்தம் ?''

'' ஏதோ பலமான யோசனைன்னு அர்த்தம் !''

''அதெல்லாம் ஒண்ணுமில்லே, சரளா!''

''ஒண்ணுமில்லேன்னு சரிதான்'' என்ற சரளா, காப்பி டம்ளரை எடுத்துக் கொண்டு உள்ளே போகத் திரும்பினாள். போகிற போக்கில், ''ஏதோ கள்ள நோட்டு அடிக்கிறது பற்றித்தான் தீவிரமாக யோசனை பண்ணிண்டிருந்தேளோன்னு ஆசையோடே நினைச்சேன்; உம், எதற்கும் கொடுத்து வைத்திருக்க வேண்டாமா?'' என்று ஏக்கப் பெருமூச்சோடு கூறினாள்.

''என்னது? என்னது? கள்ள நோட்டா ? சரளா, என்ன சொல்றே நீ?'' என்று பதறினான் போ.

விருட்டென்று சரளா திரும்பினாள்.

''பார்த்தேளா, கண்டுபிடிச்சுட்டேன்!''

''என்னத்தைக் கண்டுபிடிச்சே?'' மலங்க மலங்க விழித்தான் போ.

''நீங்க கள்ள நோட்டு அடிக்கிறது பற்றித்தான் யோசிச்சிண்டிருந்தேள் என்கிறதைக் கண்டுபிடிச்சுட்டேன் !''

போ தன்னை ஒருவாறு சுதாரித்துக் கொண்டு, ''அழகுதான் போ! ஒரு யோசனையும் இல்லேன்னுதான் ஆரம்பத்திலேயிருந்தே சொல்லிண்டிருக்கேனே'' என்றான்.

''அப்படியானாலும்! சில வெடிக் கட்டைக் கொளுத்திப் போட்ட மாதிரி ஏன் சித்த முன்னாடி துள்ளினேள்? இதோ, பாருங்கோ ! எனக்கோ விஷயம் ஓரளவுக்குத் தெரிஞ்சு போச்சு: இனி முழுக்கத்தான் தெரியட்டுமே? உங்க மனசிலேயே வைச்சுண்டு அவஸ்தைப் படுவானேன்? அப்புறம் சொப்பனத்திலே எல்லாத்தையும் உளறுவானேன்?''

''என்ன, என்ன? சொப்பனத்தில் உளறினேனா ?''

''ஆமாம். நேற்று ராத்திரி நீங்க ரொம்ப நேரமாத் தூங்கவேயில்லே; என்னையும் கவனிக்கலே; கையைக் காலை வலிக்கிறதுன்னும் சொல்லலே. ஆக ஏதோ பலமான யோசனை போலேயிருக்குன்னு நினைச்சேன். அப்புறம் இலேசாக் குறட்டை ஒலி கேட்டது. கடிகாரத்தில் மணி பன்னிரண்டு அடிக்கிறதை எண்ணினேன். திடீர்னு நீங்க குறட்டை விடறதை நிறுத்திட்டு, 'டடக், டடக்; டடக், டடக்' அப்படீன்னு சொன்னேள்?...''

''என்ன சொன்னேன், என்ன சொன்னேன் ?''

''டடக், டடக்; டடக், டடக்!''

''ஓ! புரிஞ்சு போச்சு, புரிஞ்சு போச்சு. மேலே சொல்லு!''

''இது என்னடா புது மாதிரி குறட்டை ஒலியா இருக்கேன்னு எழுந்து உட்கார்ந்தேன். நைட் லேம்ப் வெளிச்சத்திலே உங்க வாய் அசையறதைப் பார்த்தேன். 'டடக், டடக்' சத்தம் நின்னுடுத்து. அதுக்குப் பதிலா, 'புது நோட்டு அப்படித்தான் மணக்கும் ! அசல் நோட்டுத்தான், யோசிக்காதீங்க' என்றெல்லாம் பேசினேள். சரி, ஏதோ பிளான் போட்டிருக்கார்ன்னு தீர்மானம் பண்ணிண்டேன் !''

''தீர்மானிச்சுட்டியா? போச்சு, போச்சு ! சரளா, எல்லாத்தையும் மறந்துடு ! நான் கள்ள நோட்டு அடிக்க யோசனை பண்ணியது என்னவோ வாஸ்தவம்தான். ஆனால் அந்த யோசனையை இப்பவே 'ஸ்மால் கார் ப்ராஜெக்ட்' ஆக்கிட்டேன்.''

''அதாவது திட்டம் நிறைவேறாத திட்டமாக, வெறும் காகிதத் திட்டமாகவே இருக்கும் என்கிறேள்.''

''அடியே, நீ பேப்பர்கூடப் படிக்கிறியா ?''

''நீங்க ஆபீசுக்குப் போனப்புறம் இங்கே எனக்கு வேலே? குழந்தையா? குட்டியா ? அது சரி. ஏன் திட்டத்தைக் கைவிட்டேள்?''

''அதை விளக்கி வேறே சொல்லணுமா? கள்ள நோட்டு அடிக்கிறது என்ன ஊரறிய நடத்தக்கூடிய வியாபாரமா? ரகசியமா நடக்கணும் !''

''எனக்குத் தெரிஞ்சால் ஊரெல்லாம் பரவிவிட்டதா அர்த்தமா? பெண்ணாய்ப் பிறந்தவள் ரகசியத்தை எங்கே காப்பாத்தப்

போருன்னு யோசிக்காதீங்கோ. அதுக்கு லாயக்கில்லேன்னு இந்திரா காந்தி எப்படிப் பிரதம மந்திரியா இருக்க முடியும் ?'' என்று கேட்டுக் கொண்டே சரளா அவனுக்கருகில் வந்து குழைந்தாள்: ''உங்களுக்கு எந்த உதவி வேணுமானாலும் செய்யத் தயாரா யிருக்கேன் நான் !''

''என்னது! இந்தக் கோல்மால் வியா பாரத்துக்கு நீயும் உடந்தையா யிருக்கேன்னு சொல்றியா ?''

அவன் அமர்ந்திருந்த கட்டிலில் பக்கத்தி லேயே உட்கார்ந்து, கன்னத்தை வருடித் தன் பக்கமாக அவன் முகத்தைத் திருப்பினாள் சரளா. ''பின்னே, எனக்கு மட்டும் கைநிறையப் பணத்தை அள்ளணும்னு ஆசையா இருக்காதா? வசதியா வாழ ணும்கிற எண்ணம் எனக்கு மட்டும் இருக்கக்கூடாதா?'' என்றாள்.

''செத்தே முன்னாடி இந்திரா காந்தி பெயரை 'இழுத் தியேடி! சரியாச் சொல்ல ணும்னு நீ மாக்பெத் ஆம் படையாள் லேடி மாக் பெத்!''

''ஆகமொத்தம் உங்களுக் குச் சரியான ஜோடின்னு ஒத்துக்கறேள் !'' என்று கூறியபடியே எழுந்துஉள்ளே சென்றாள் சரளா.



* * *

போவுடைய பிரஸ் முதலாளி குணசேகரன் பேச்சுவாக்கில் உதிர்த்த ஒரு வாக்கியமானது போலை இந்த அளவுக்குச் சிந்தித்துத் திட்டமிட வைத்துவிட்டது.

ஓரிரு மாதங்களுக்கு முன் னர்தான் அவர்கள் அச்சகத் துக்கு ஒரு புதிய இயந்திரம் வந்தது. 'லிஷோகிராஃப்' என்பது அதன் பெயர். இந்தியாவிலேயே மொத்தம் மூன்றோ நாலோதான் இந்த இயந்திரங்கள் உள்ளன என் றும் அச்சுத் துறையில் இந்த எலெக்ட்ரானிக் சாதனம் ஒரு மாபெரும் புரட்சி என் றும் குணசேகரன் பெருமை யாகத் தம் கீழ் வேலை பார்ப்பவர்களிடம் சொல்லிக் கொண்டான்.

பத்திரிகைகளிலோ புத்தகங்களிலோ எழுத் தும் உண்டு, படங்களும் உண்டு. எழுத்தை அச்சுக் கோக்கும் நவீன இயந்திரம் ஒன்று குணசேகரன் அச்சகத்தில் ஏற்கனவே இருந் தது. படங்கள் அச்சிடுவதற்கான பிளாக்குகள் தயாரிக்க அவன் இதுவரை சம்பிரதாயமான பாணியைத்தான் கையாண்டு அதற்கென ஆட்களை அமர்த்தியிருந்தான். அந்தப் பிளாக் தயாரிப்புப் பகுதியில் போ தலைவன்.

இப்போது மேற்கு ஜெர்மனியிலிருந்து தருவிக்கப்பட்டிருந்த இந்த எலெக்ட்ரானிக் சாதனம் பிளாக் செய்யும் வேலையை ரொம்ப எளிதாக்கி விடுகிறது. இயந்திரத்தின் ஒரு பக்கத்தில் ஓவியர் தீட்டிய படத்தை அல்லது ஒரு புகைப்படத்தை வைக்க வேண் டியது; என்ன அளவுக்குப் பிளாக் தேவையோ அதற்கு ஏற்பச் சில திருகுகளைக் சுழற்றிச் சரி செய்ய வேண்டியது; பின்னர் ஸ்விட்சைத் தட்ட வேண்டியது. அவ்வளவுதான், மறுபக் கத்தில் ஒரு சில நிமிஷங்களுக்குள் பிளாக் தயாராகிவிடும். துத்தநாகம் அல்லது செம் புத் தகட்டின் மீது ஓர் எலெக்ட்ரானிக் ஊசி மெல்ல நகர்வதன் மூலம் பிளாக் உருவாகிறது. வேலை முடிந் ததும் இயந்திரத்தை நாம் நிறுத்தச் சிரமப்பட வேண் டாம்; காரியம் ஆயிற்று என்றதும் அது தானாகவே நின்றுவிடும்! அத்தனை வச திகள்! கறுப்பு வெளுப்புப் படமாயினும் சரி, பல வண் ணப் படமாயினும் சரி, இந் தக் லிஷோகிராஃப் இயந் திரம் தயாரித்துத் தரும் என்பது மட்டுமில்லை; சரி யான மை கொண்டு சரி யான தாளில் அச்சடித்தால் அசலுக்கும் நகலுக்கும் வித் தியாசம் தெரியாதவாறு அத்தனை சுத்தமாக இருக் கும் வேலை. மனித யந்த ரத்தில் தயாராகும் பிளாக் என்றால் அசலுக்கும் அச்ச டித்த நகலுக்கும் வண்ணச் சேர்க்கை விஷயத்தில் வேற் றுமைகள் ஓரளவு ஏற்படத் தான் செய்யும். ஆனால் இந்த எலெக்ட்ரானிக் சாத னம் ஒரு சிறு பிசகும் நேர அனுமதிக்காது. கறுப்பு வெளுப்புப் படமானால் ஒரே பிளாக் — பத்து நிமிஷங் களில் தயார்! வண்ணப் படமானால் மஞ்சள், நீலம், சிவப்பு, கறுப்பு என்று நாலு பிளாக்குகள். தயாரிக்க அதிக பட்சம் போனால் ஒன் றரை மணி நேரம் ஆகும், அவ்வளவுதான். இந்த இயந் திரத்தை இயக்க ஒரே ஒரு ஆள் போதும் !

மிக மிகப் புதுமையான இந்த இயந்திரத் தின் அருமை பெருமையைத் தமது ஊழியர் களிடம் குணசேகரன் இப்படி வர்ணித்தான்: ''இந்த இயந்திரம் எவ்வளவு உசத்தி தெரி யுமா? கள்ள நோட்டு என்று யாரும் லவலேச மும் சந்தேகிக்க முடியாதபடி கள்ள நோட்டு தயாரிக்கலாம் ! ஒரு பக்கத்தில் அசல் நோட்டை வைக்க வேண்டியது. இயந்திரத் தின் ஸ்விட்சைப் போட வேண்டியது. மறு பக்கம் கள்ள நோட்டுக்கான முதல் தர பிளாக்குகள் தயார் ! இந்தியா செக்யூரிட்டி



பிரஸ்ஸிலே வேலை செய்கிறவனையே அழைச்சுண்டு வந்து காட்டலாம். அவன் தயாரிச்ச நோட்டுக்கும், நாம் தயாரிச்ச நோட்டுக்கும் வித்தியாசம் அவனால் நிச்சயம் கண்டுபிடிக்க முடியாது !''

பெருமைக்காக, யதேச்சையாக, — தவறிப் போய் என்றுகூடச் சொல்லலாம் — குணசேகரன் இவ்வாறு கூறிவிட்டான். ஆனால் இவ்வார்த்தைகள் எப்படி போவின் மனத்தில் வேரூன்றிக் கொண்டன !

முதல் தரமான ஹைடெல்பர்க் அச்சு இயந்திரம் வைத்திருந்தார் முதலாளி. பேப்பர் ஸ்டாக்கை அலசிப் பார்த்தால் நோட்டு அச்சடிக்கும் தரத்தில் காகிதம்கூட அகப்படலாம். நம் பாரத புண்ணிய பூமியில் கள்ள நோட்டு அச்சடிப்பது என்பது குடிசைத் தொழிலாகவே மாறிவிட்டிருக்கும் போது இத்தனை நவீன சாதனங்களை வைத்துக் கொண்டு முதல்தரமான, — யாரும் எளிதில் கண்டு பிடிக்க முடியாத — கள்ள நோட்டுக்களை அச்சடிப்பது சாத்தியமில்லாமலா போய் விடும் ?

இரவு நேரங்களில் போ, பக்கத்தில் படுத்திருக்கும் சரளாவைக்கூட அலட்சியம் பண்ணும் அளவுக்கு அவன் சிந்தனையை ஆக்கிரமித்துக் கொண்டது இந்த எண்ணம்தான். ஃபெமினா பத்திரிகையில் நவநாகரிக உடை அலங்காரங்களை அறிமுகப்படுத்தும் நங்கையின் படம் உயிர் பெற்று எழுந்து வந்தது போல் சதா தோற்றம் அளிப்பாள், சரளா ! அவளாலேயே போவைக் கவர முடியவில்லை என்றால் அவன் மனம் எந்த அளவுக்கு இந்தக் கள்ள நோட்டு விவகாரத்தில் கருத்தூன்றி இருக்க வேண்டும் ! ஊகித்துக் கொள்ளுங்கள்.

ஆனால் தனி ஒருவனாக இதைச் சாதிக்க முடியாதென்றும் திட்டம் சற்று விரிவான முறையில் தீட்டப்பட வேண்டும் என்றும் அவன் உணர்ந்தான். தன்னுடனேயே பிரஸ்ஸில் வேலை செய்யும் மாலி ஒருவனுடைய உதவியையாவது நாட வேண்டியது தான்.

இந்த எண்ணம் மனத்தில் சுழன்று கொண்டேயிருக்க, அவன் ஒருநாள் அச்சகத்தில் ஏதோ காரியமாக இருந்தவாறே 'டடக், டடக்; டடக், டடக்' என்று ஜபித்தான்.

மாலி கேட்டான்: ''என்னடா, சதா, 'டடக், டடக்; டடக், டடக் ?' புதுசா ஏதாவது சினிமாப் பாட்டா ?''

''அப்படித்தானே இந்தப் புது மிஷின் ஓடறது? கேட்க இனிமையாக இல்லை?''

''இருக்கும்டா, இருக்கும்! லட்ச ரூபாய் போட்டு வாங்கி இருக்கார் முதலாளி. உனக்குக் கேட்க இனிமையா இருக்கா ?''

''ஏன்டா ! லட்ச ரூபாய் போட்டு முதலாளி வாங்கியிருக்கார்ன்னு அவர் காதுக்கு மட்டும்தான் இனிமையா ஒலிக்கணுமா ? ஓசை எல்லார் காதிலேயும் ஒரே மாதிரியாத்தான்டா விழும் !''

''இந்த எலெக்ட்ரானிக் யுகத்திலே என்னவெல்லாம் புதுமைகள் கண்டுபிடிச்சிருக்காங்க பார்த்தியா ? முதலாளி சொன்னாரே, எந்தப் படத்தை வைச்சாலும் அணு அளவு பிசகாமே பிளாக் தயாரிக்கக்கொடுக்கும்னு.''

''பார்த்துக்கிட்டுத்தானே இருக்கோம், இதன் திறமையை? பயிற்சி பெற்றுக்கிட்டுத்தானே இருக்கோம், இதனை இயக்க? நாம்தானே இனிமேல் இதைக்கட்டிக்காக்கணும்?''

''ஆமாம். ஜெர்மனியிலிருந்து வந்திருக்கிற இன்ஜினீயர் நமக்கு இதன் நுணுக்கங்களைக் கத்துக் கொடுத்துவிட்டுத் திரும்பிப் போயிடப் போறார்.''

''இருந்தாலும் ஆச்சரியம்தான். நூறு ரூபாய் நோட்டை இந்தப் பக்கம் வைச்சால் அந்தப் பக்கம் அற்புதமான பிளாக் தயாராயிடும்னு முதலாளி சொன்னாரே!''

''ஆமாம்! இது செய்து தருகிற பிளாக்கை வைச்சு அச்சடிச்சால் அசல் எது நகல் எதுன்னு ஆண்டவருக்குக்கூடத் தெரியா துன்னு சொன்னார்.''

இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர். விநாடிகள் நிமிஷமாகி நகர்ந்தன. அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டேயிருந்தனர்.

''மாலி!''

''போ!''

''நான் நினைக்கிறபடி நீ நினைக்கிறியா ?''

''நீ என்ன நினைக்கிறே ?''

'' நான் நினைப்பதையே நீயும் நினைப்பாய் என்பது எனக்கு நிச்சயமானால் நான் என்ன நினைக்கிறேன்னு சொல்ல எனக்குத் தைரியம் வரும்.''

'' நம்ம முதலாளி சொன்னது சரிதானான்னு சும்மா விளையாட்டாச் சோதிக்கப் பார்க்கலாம் என்கிறியா?''

''ஆமாம், சும்மா விளையாட்டாத்தான்.''

''சோதனையிலே வெற்றி நம் பக்கம் இருந்தால் ?''

''சாதனைகளைத் தொடரத் துணிவு வரும்.''

'' அந்தத் துணிச்சலே இப்போதே வரவழைச்சுக்கிட்டாம் என்ன ? சோதனை எதற்கு? இந்தக் லிவிஸோகிராஃப் நம்மைக் கைவிடவா போகிறது? ஜெர்மனியில் தயாரானதாயிற்றே ! இந்தியத் தயாரிப்பானால் தயங்க வேண்டியது நியாயம்.''

''அப்போ 'ஜே'போட வேண்டியதுதான்!''

இப்படியாக ஆரம்பித்து போவும் மாலியும் சீக்கிரமே மனத்தால் ரொம்பவும் நெருங்கி வந்துவிட்டனர். அடிக்கடி அந்தரங்கமாக ஆலோசனைகள் நடத்த வேண்டிய கட்டம் வந்து விட்டது.

போ சொன்னான்: ''டேய்! இனிமேல் இது விஷயமா இந்த அச்சகத்திலே நாம் ஒரு வார்த்தைகூடப் பேசக் கூடாது. ஆபத்து ! நான் தவறாமே இங்கே வேலை முடிந்ததும் வீட்டுக்கு வா. சரளாவை வாய்க்கு ருசியா சமைச்சுப் போடச் சொல்றேன். சாப்பிட்டுக் கொண்டே மூணு பேருமா பேசுவோம்.''

அப்போதுதான் சரளாவுக்கும் இந்தத் திட்டத்தில் பங்கு உண்டு என்பது மாலிக்குத் தெரிந்தது. ஸ்விச்சைப் போட்டான். லிவிஸோகிராஃப் இயங்க ஆரம்பித்தது. ''டைக், டைக்; டைக், டைக்!''

''அடேய்! முன்னைவிட இந்த ஒலி இப்போ இன்னும் இனிமையா இருக்கு. இல்லையா?'' என்று கேட்டவாறே அதைத் தட்டிக் கொடுத்தான் மாலி, வீட்டில் வளரும் நாயையோ, பூனையையோ கொஞ்சுகிற மாதிரி.

போ அதற்கு ஒரு முத்தம் தந்துவிட்டு, ஏர்கண்டிஷனரை இன்னும் சற்று அதிக சில்லிப்பைத் தருமாறு சரி செய்தான். ஆம்; லிவிஸோகிராஃப்புக்குக் குளுகுளு அறை அவசியத் தேவை; தெரிந்து கொள்ளுங்கள்!

* * *

சரளா உற்சாகமாக இருந்தாள். வடை பாயசத்துடன் சமையல் அமர்க்களப்பட்டது.

சாப்பிட்டு ஏப்பம் விட்டதும் மாலி கேட்டான்: ''விருந்து பிரமாதமாயிருக்கே, என்ன விசேஷம் ?''

'' நம்ம கம்பெனிக்கு இன்று அங்குரார்ப்பண விழான்னு வைச்சுக்கோயேன் !''

'' இப்படியா சொல்லுவா ?'' என்று கணவனை அடக்கிவிட்டு, ''நீங்க வந்திருக்கேளே அதுவே விசேஷந்தான்'' என்றாள் சரளா மாலியிடம்.

''ஆமாம், இந்த முதல் போடாத நிறுவனத்தின் மானேஜிங் டைரக்டராச்சே மிஸ்டர் மாலி'' என்று ஆமோதித்தான் போ.

''ஸ்தாபகர் நீதானேடா !''



''அடிக்கல் நாட்டக்கூட ஓர் அமைச்சரைக் கூப்பிட முடியாதேங்கிற கவலைதான் எனக்கு! திறப்பு விழாவா, கோலாகலமா? ஒண்ணும் கிடையாது.''

''ஏன், இப்படிச் செய்தாலென்ன?'' என்று குறுக்கிட்டாள் சரளா, வெற்றிலைத் தட்டை அவர்கள் எதிரே கொண்டு வந்து வைத்து விட்டு. ''சினிமா எடுக்கப் போறோங்கன்னு ஒரு மந்திரியைக் கூப்பிட்டுக் காமிராவைக் முடுக்கச் சொல்றுங்க. பலானவர் காமிராவை முடுக்கிப் படப் பிடிப்பைத் தொடங்கி வைத்தார்ன்னு பேப்பர்லே ஃபோட்டோவெல்லாம் வருது. அதுமாதிரி இந்த லிதோ கிராபோ என்னமோ சொல்றீங்களே அதன் ஸ்விட்சைத் தட்டி விட்டுவிட்டுப் போகட்டுமே, மந்திரி !''

''டேய்! உன் பெண்டாட்டி சொல்றதைக் கேட்டியா? கள்ளநோட்டுக் கம்பெனியின் தொடக்கவிழாவுக்கு எந்த மந்திரியை அழைச்சால் பொருத்தமா இருக்கும்னு யோசனையா இருக்காம். தொழிலமைச்சரைக் கூப்பிடலாமா, இல்லே முதல்வரையே வரவழைக்கலாமாங்கிறதுதான் அவள் பிரச்னை! பதில் சொல்லு!''

''அவள் நினைக்கிறதிலே என்ன தப்பு? ஒவ்வொருத்தர் லட்சம் கோடின்னு முதல் போட்டுத்தான் தொழிலோ வியாபாரமோ தொடங்குவாங்க. நாம் முதலில்லாமலேயே நாட்டில் செல்வம் பெருகப் பாடுபடுகிறோம். புரட்சிகரமான திட்டம் இல்லையா இது? தேசத்துக்கே வழி காட்டும் 'சிறிய திட்டம் ஆயிற்றே. இப்படிப்பட்ட முக்கியமான தொழிலுக்குத் தொடக்க விழா நடத்தி மந்திரிகளுக்கெல்லாம் ஒழுங்கா அழைப்பிதழ் அனுப்பலேன்னு அவங்க ரொம்ப வருத்தப்பட்டுப்பாங்க. முக்கியமான நிகழ்ச்சிகளுக்குத் தங்களுக்கு அழைப்பிதழ் வருவதில்லைன்னு ஏற்கனவே அவர்களுக்கு ரொம்பக் கோபம். அவங்களை ஒதுக்கி விட்டுக் காரியம் நடப்பதாக நினைக்கக் கூடாது, பாரு!''

''கூப்பிட்டா ஒருவேளை வந்தாலும் வந்துடுவாங்க; பெரும் ஃபோட்டோவும் பேப்பரிலே வருமே! ஆனா அவ்வளவு பப்ளிசிடி கொடுத்து நாம் கம்பெனியை ஆரம்பிக்க முடியாதே!''

''கரெக்ட்! தொடக்க விழாவை அடக்கமா நடத்திவிடுவோம். தொழில் வெற்றிகரமா நடக்கட்டும். அப்புறம் ரூபாய் நோட்டுக்களால் ஆன மாலைகளை ஒரு மந்திரி விடாமல் சகலருக்கும் போட்டு ஃபோட்டோவும் பிடிச்சுடலாம் !''

''அடப் பாவி! கள்ளநோட்டு மாலையையா மந்திரிக்குப் போடறேங்கிறே ?''

''அதை அவங்க எங்கே கண்டு பிடிக்கப் போறாங்க?''

''சரிடா, தமாஷ் போதும். கொஞ்சம் சீரியஸாப் பேசுவோம்'' என்றான் போ.

''ஆகட்டும், திட்டத்தை விவரி. சரளாவும் கவனமா கேட்டுக் கொள்ளட்டும்!''

போ சொன்னான்: ''நம் கள்ள நோட்டுக் கம்பெனி இரவு நேரங்களில்தான் இயங்க முடியும். பகலில் நாம் பரம சாதுக்களாய் வழக்கம்போல் அச்சகத்தில் வேலை செய்வோம். முதலாளி தினம் நாலு மணி சுமாருக்கே வீட்டுக்குக் கிளம்பிடறார். மாலை ஐந்தானதும் கூர்க்கா மணி அடிச்சுடறான். ஆனாலும் எல்லாரும் வீடு திரும்பச் சுமார் ஐந்தரை ஆகும். அப்புறம் கூர்க்கா அச்சகத்தைப் பூட்டி வைத்துக் கொள்கிறான். தன் டியூட்டி நேரம் முடிந்ததும் அப்போது வருகிற இரவு வாட்ச்மேன்கிட்டே சாவிகளை ஒப்படைச்சு விட்டுப் போய் விடுகிறான். பிறகு இரவு முழுதும் அச்சகத்தினுள்ளே யாரும் செல்வதில்லை. காவலுக்கு இருப்பது வாட்ச்மேன் சிவப்பிரசாத் மட்டும்தான்.''

''இரவில் சுமார் எட்டு மணி முதல் பன்னிரண்டு வரை நாலு மணி நேரம் நாம் வேலை செய்வோம். அப்புறம் சைக்கிளில் வீடு திரும்பினால் மறுநாள் காலை ஏழு மணி வரை தூங்கலாம். அந்த ஓய்வு போதும். எட்டரை மணிக்கு எப்போதும் போல் டியூட்டிக்கு ஆஜராகி விடலாம். இரவில் தினம் நாலு மணி நேரம் வீதம் நாலைந்து நாள் நாம் வேலை செய்ய முடிந்தால் போதும். பல லட்சக் கணக்கில் நோட்டுக்கள் அச்சடித்து விடலாம்!'' என்றான் மானி.

''அச்சகம் நகரின் மையத்தில் இல்லாமல் எல்லைப்புறத்தில் அமைந்திருப்பது ரொம்ப சௌகரியம்'' என்றான் போ. ''ஏகாந்தமான இடம், யாரும் சந்தேகிக்க மாட்டார்கள்.''

''எதற்கும் நாம் முன் ஜாக்கிரதையாக ஜன்னல்களை அளவெடுத்துக் கறுப்பு ஸ்கிரீன் தைத்துக் கொண்டு போவோம். ஜன்னல்களுக்குக் கண்ணாடிக் கதவுகளானாலும் கறுப்புப் படுதா தொங்கவிட்ட பிறகு விளக்கைப் பொருத்தினால் வெளியே வெளிச்சம் தெரியாது'' என்றான் மானி.

''இரவு, வேலை முடிந்ததும் ஞாபகமாக அவற்றைக் கழற்றிச் சுருட்டிக் கொண்டு வந்துவிட வேண்டும்.''

''அவற்றை மட்டுமல்ல; நாம் அவ்வப்போது தயாரிக்கும் பிளாக்குகள் ரூபாய் நோட்டுக்கள் முதலானவற்றையும் அப்புறப்படுத்தி, இங்கே கொண்டு வந்து சரளாவின் பொறுப்பில் கொடுத்துவிட வேண்டும். அவள் இவற்றுக்கென்று ஓர் அறையை ஒழித்து, அதில் பூட்டி வைப்பாள். ஒரு வாரம் அந்த அறையைத் திறக்கவே கூடாது. நாம் சாமான்களை வைக்கவும் எடுக்கவும் மட்டுமே திறப்போம். இரவில் நாம் அச்சகத்தில் வேலை செய்தோம் என்கிற சந்தேகமே யாருக்கும் ஏற்படாமல் மாலையில் எப்படி இருந்ததோ, அப்படியே நம் வேலை முடிந்த பிறகும் விட்டு விட்டுத் திரும்பணும். எந்த விதமான சின்ன மாறுதலையும் யாரும் உணரக் கூடாது, மறுநாள் காலையில். இது ரொம்ப முக்கியம்.''

''அதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளலாம். நம் வீடுகள் அச்சகத்திலிருந்து இரண்டு மைல் தூரத்துக்குள் இருப்பது பெரிய சௌகரியம். இரவு சற்று நேரமானாலும் சைக்கிளில் போய் வந்துவிடலாம் பார்! சேர்ந்தாற்போல் நான்கு நாட்கள் நைட் ஷோ சினிமா பார்த்ததாக நினைத்துக் கொண்டால் போகிறது, சிரமம் தெரியாது!''

''அது போதாது, அப்பனே!'' என்றான் மானி. ''நீ குடித்ததாக எண்ணிக் கொள்ள வேண்டும்.''

சரளா குறுக்கிட்டாள்: ''ஐயையோ, என்னங்க இது! அதெல்லாம் வேண்டாம்!

Who cares if your hair is different?

# Sunsilk cares–
## with 3 special shampoos

**Pick the one that's perfect for you**

**Sunsilk Lemon Shampoo**
**For Greasy Hair:** Gently washes out excess grease...gives you days of clean, bouncing, silken hair.

**Sunsilk Tonic Shampoo**
**For Dry Hair:** Contains Allantoin to nourish your hair...revives that silken lustre, leaves hair softly glowing.

**Sunsilk Beauty Shampoo**
**For Normal Hair:** Perfectly balanced to keep your hair in beautiful condition, weaving silk into every strand.




**Sunsilk** - more than a shampoo, a cosmetic for your hair

*Quality Products by HINDUSTAN LEVER*

LINTAS-SS. 11-140



''டேய்! என் பணத்தை நீ எப்பத்தான் இருப்பிக் கொடுக்கப் போறே?''

''இதோட மூணு தடவை இருப்பிக் கொடுத்தாச்சு. கடைசியா இந்தத் தடவையும் கொடுத்துவிட்டு இனிமேல் நான் உன்னிடம் பயப்படப் போவதில்லே, ஆமாம்!''

கள்ள நோட்டுக்கு ஆசைப் படப் போக அது எங்கெங்கெல்லாமோ கொண்டுபோய் விட்டு விடும்போலிருக்கே!''

''உஷ்! நெருப்புன்னு வாய் வெந்துடுமா? உன் கணவன் குடிப் பழக்கத்துக்கு அடிமையாகி விட்டதாகப் பக்கத்து வீட்டுக்காரர்களிடம் நாளையிலிருந்தே முறையிட்டு வை. இல்லாது போனால் நமது திட்டம் செயல்படும் நாலு நாட்கள் மட்டும் இவன் வீட்டுக்குத் தாமதமாக வந்தால் அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள் சந்தேகிப்பார்கள்'' என்ற மாலி போவிடம் கூறினான்: ''நாளையிலிருந்து ரெண்டு மூணு நாளைக்கு. அதாவது ஆரம்ப விழா நடத்தும்வரை நீ தினம் ஒரு நைட் ஷோ பார்த்துட்டு வா. வீட்டுக்குள் நுழையும் போது ஞாபகமாகக் கொஞ்சம் உரத்த குரலில் ஏதாவது உளறு. ஓரிரண்டு நாள் சரளாவின் விசும்பல் சத்தமும் நீ அவளை அதட்டுகிற ஓசையும் கேட்டாலும் நல்லது. சந்தேகம் தட்டுவதற்குப் பதிலாகச் சரளாவின் மீது அநுதாபம் பெருகும்.''

''எனக்கு நடிப்புத் திறன் போதாதுடா மாலி. பள்ளிக்கூட நாடகத்திலேகூட என்னைச் சேர்த்துக்க மாட்டேன்னுட்டாங்க...''

''அதற்காக நிஜமாகவே தண்ணி போட்டுட்டு வரேன்கிறயா, பாலி! அப்புறம் சரளா என்னை மன்னிக்கவே மாட்டா. மேலும் நாம் மேற்கொண்டிருக்கிற இந்த பிஸினஸுக்கு அதெல்லாம் உதவாது. உடலும் மூளையும் ரொம்பச் சுறுசுறுப்பா இயங்கினால்தான் பிழைச்சுக் கரையேறலாம்; இல்லாத போனால்...''

''கல்லுடைக்க வேண்டியதுதான் என்கிறியா? விட்டுத் தள்ளு. சும்மா சரளாவைப் பயமுறுத்தி வைக்க அப்படிச் சொன்னேன். சரி, உன் கேஸ் என்ன? சேர்ந்தாற்போல் சில நாட்கள் அர்த்த ராத்திரியில் வீட்டுக்கு வந்து கதவைத் தட்டினால் உன்னை யாரும் சந்தேகிக்க மாட்டார்களா?''

''வீட்டில் நானும் என் அம்மாவும் மட்டும் தானே? நான் எப்போ வீட்டுக்கு வரேன், போறேன்னு அக்கம் பக்கத்தில் யாருக்கு அக்கறை? கதவைத் தட்டக்கூட மாட்டேன். வாசற் கதவைப் பூட்டிச் சாவியை எடுத்துக் கொண்டு வந்து விடுவேன். திரும்பி வந்து திறந்து கொள்வேன்.''

''உன் அம்மாவை உள்ளே வைச்சுப் பூட்டிண்டு வந்துவிடுவாயா? பேஷ்!''

''ஆமாம், ராத்திரி நேரம்தானே? அந்தக் கிழடுதான் கொஞ்சம் புலம்பும். 'வேண்டாண்டா, கண் முழிக்காதே. உடம்பு கெட்டுப் போகும்' என்பாள்.''

''நைட் டியூட்டி செய்யறேன். ஓவர்டைம் கிடைக்கும்னு சொல்லிக்கோ.''

''அது போதாது. 'நீ சம்பாதிக்கிற காசு நமக்குக் காணுதா?' ஓவர்டைம் பணம் எதுக்கு?' என்பாள். அதனாலே, 'அம்மா, தடை கூறாதே! இந்தச் சமயத்தில் என் சேவை நாட்டுக்குத் தேவை! நாட்டின் பொருளாதாரம் ரொம்பச் சீர் கெட்டிருக்கிறதினாலே அதிகமாக உழைக்கிறோம். உற்பத்தியைப் பெருக்குகிறோம்!' என்றெல்லாம் சவடாலாப் பேசணும்.''

''அப்படி நீ சொல்றதிலேயும் தப்பு ஒன்னும் கிடையாது'' என்றான் போ. ''பாரத அரசே ஏறத் தாழ இந்தக் காரியத்தைத்தான் பண்ணிகிட்டிருக்கு. சீர்குலைந்த பொருளாதாரத்தை நிலைப்படுத்தறதா நினைச்சுக்கிட்டு நோட்டு நோட்டா அச்சடிச்சுத் தள்ளறது.''

''அது சரி; எனக்கொரு சந்தேகம்'' என்றாள் சரளா. ''முக்கியமான சிக்கல், வாட்ச்மேன் சிவப்பிரசாத். அவனை என்ன பண்ணுவது?''

''வேறே வழியில்லே; அவனையும் வளைச்சுப் போட்டுக்க வேண்டியதுதான்.''

''என்னது? டேய், போ! அவன் காவல்காரண்டா!''

''இருந்தா என்ன? பணம்னு பிணமும் வாயைத் திறக்கும்னு கேள்விப்பட்டதில்லையா நீ?''

''அது மட்டுமா? வேலியே பயிரை மேய்கிறது என்ற பழமொழியும் எனக்குத் தெரியுமே!'' என்றாள் சரளா.

''சிவப்பிரஸாதைக் கைக்குள் போட்டுக் கொள்ளாமல் எதையும் சாதிக்க முடியாது நாம்.''

சரளா, ''என் முகமூடி தரிச்சுண்டு போய்க் கர்ச்சிபிலே இருக்கிற மயக்க மருந்தை அவன் சுவாசிக்குமாறு செய்து...'' என்று ஏதோ யோசனை கூற ஆரம்பித்தாள். அதற்குள் போ, அவளை அடக்கினான்.

''சேச்சே! ஏதேதோ சினிமாக் காட்சியை யெல்லாம் இங்கே விவரிக்காதே. ஒரே ஒரு நாள்னு அவன் மண்டையில் ஒரு தட்டுத் தட்டிட்டுக்கூட உள்ளே புகுந்து விடலாம். நாலு நாளைக்கு அதையே செய்ய முடியுமா? உஷாராகி விட மாட்டார்களா?''

''அவன்கிட்டே என்னன்னு சொல்லி நம்ம வலையிலே சிக்க வைக்கிறது? கள்ள நோட்டு அச்சடிக்கிறது மகா பாவம் அது இதுன்னு சொல்வானே. மிலிட்டரியில் வேறு இருந்து விட்டு வந்தவனாச்சே!''

''அதனால்தான் ரொம்பச் சௌகரியம். நம்மில் ஒருவரை அவன் தளபதியாக ஏற்றுக் கொண்டு விட்டால் அப்புறம் கேள்வி கேட்காமல் சொன்னபடி செய்வான்.''

''முதலில் தளபதியா ஏற்றுக்கொள்ளணுமே? அதற்கு வழி?''

''கள்ள நோட்டு அச்சடிக்கிறது ஒன்னும் தப்பில்லேன்னு வாதாட வேண்டியதுதான்.''

''அகப்பட்டுக் கொண்டால் கோர்ட்டிலே கூட இதே யோசனையைப் பின்பற்றுவாயா?''

''நீதிபதியே மலேச்சுடுவான். கேளு. இப்போ சர்க்காரிலே என்ன செய்யறாங்க? அதையேதான் நாமும் செய்யறோம். அவங்க பகிரங்கமாச் செய்யறதை நாம ரகசியமாச் செய்யறோம். அதுதான் வித்தியாசம். என்னு, நாட்டில் தங்கக் கையிருப்பு எவ்வளவு இருக்கோ அந்த அளவுக்கு நோட்டு அச்சடிச்சால் அது அசல் நோட்டு. அதாவது உண்மை மதிப்புள்ள நோட்டு. ஆனால் நம்ம நாட்டிலே அப்படியா செய்யறாங்க? ஏதேதோ டம்பாச்சாரித் திட்டம்போட்டு மானவாரியா நோட்டு அச்சடிச்சுக்கிட்டிருக்காங்க. பத்து ரூபாய் நோட்டுக்கு ஒரு ரூபாய் மதிப்புக்கூட இல்லாமல் செய்துட்டாங்க. ஐந்தாறு வருஷங்களுக்கு முன்னே நீ ஒரு ரூபாய்க்கு வாங்கின பொருள் இன்னிக்கு ஏழெட்டு ரூபாய். ஆக மதிப்பில்லாத காகித நோட்டு கள்ள நோட்டு இல்லாமே வேறே என்ன? நோட்டு வெள்ளம் தலைக்கு மேலே போயிட்டுதுடா. போ! இப்போ நாமும் சில லட்சங்கள் நோட்டு அச்சடிச்சு அந்த வெள்ளம் இன்னும் ஒரு சாண் உயரச் செய்யறோம். அவ்வளவே.''

''ஏன்டா இப்படிச் சொன்னால் அந்தச் சிவப்பிரகாசம் ஒப்புக் கொள்வானா?''

''மாட்டான்! அவனுக்கு எங்கேடா இந்தப் பொருளாதாரம் புரியப் போறது? அவன் கிட்டே, நீ பெரிய பணக்காரனாகலாம். உன் பெண் வசதியா வாழலாம். பட்டும் டெரிலீனுமா புடவை உடுத்திக்கலாம். அடுத்த வேளை சாப்பாட்டுக்கு அவதிப்படாமல் அவளைக் காரிலே ஏற்றிக் கொண்டு போய் அல்வா வாங்கித் தரலாம் என்றெல்லாம் சொல்லு. அவனுக்குப் பிரமிளாகிட்டே உயிர். அவளுக்குன்னு எதையும் செய்வான்.''

''சரி, முயற்சி செய்து பார்க்கிறேன்! நான் வரட்டுமா?'' என்று எழுந்தான் மாலி.

''இருங்க, இவ்வளவெல்லாம் யோசனை பண்ணினீங்க. இந்தக் கம்பெனிக்கு ஒரு நல்ல பெயர் வைக்க வேண்டாமா?'' என்று கேட்டான் சரளா.

''அதற்கும் மந்திரிதான் வரணும். பெயர் சூட்டுவதில் மந்திரிகள் மன்னர்கள் ஆயிற்றே!''

''வேண்டான்டா போ! இப்போதெல்லாம் அவங்க எதை எடுத்தாலும் ஒரே ஒரு பெயராலேதான் அழைக்க விரும்பறாங்க. அந்தப் பெயரை இந்தக் கம்பெனிக்குச் சூட்டினால் சரிப்படாது, வேண்டாம்!''

''ஏன், சரளா எண்டர்பிரைஸஸ்னு வையுங்களேன்'' என்றான் சரளா ஆசையாக.

''உன் பெயரை தைலா சூட்டிவிடலாம்னு பார்க்கிறியா? அதெல்லாம் முடியாது! என் பேர்தான் இருக்கணும்! நான்தானே இந்த ஐடியாவே கொடுத்தது!'' என்றான் போ.

''கரெக்ட்! போ அன்டு கோ! அருமையான பெயர்! தப்பித் தவறி யாராவது நம்ம ரகசியத்தை மோப்பம் பிடிச்சுத் தெரிஞ்சுக்கிட்டாக்கூட போ அன்டு கோவிலே கள்ள நோட்டு அடிக்கிறாங்கன்னு சொல்வான். போலீஸார் அப்போதும் போ அன்டு கோவைத்தான் 'ரெய்ட்' பண்ணுவாங்க! அதனாலே அவங்களுக்கும் ஆபத்தில்லே; நாமும் தப்பிச்சுக்கலாம்! போ அன்டு கோ! அடடா! எத்தனை இனிமையாயிருக்கு கேட்க? போ அன்டு கோ! அது சரிடா போ! உனக்கு ஏன் போன்னு பெயர் வந்தது? ரொம்ப நாளாக் கேட்கணும்னு இருந்தேன். ஒரு வேளை சின்ன வயசிலே உன்னை வீட்டிலே எல்லாரும் 'சீ, போ! சீ, போ'ன்னு திட்டித் திட்டியே உனக்கு சி. போன்னு பெயர் நிலைச்சுடுத்தோ?''

''அதெல்லாம் இல்லே. ரொம்பச் செல்லமாகத்தான் வளர்ந்தேன் நான். என் அப்பா பெயர் சின்னையா. அதனாலே சி. அப்புறம், எட்கர் ஆலன் போன்னு கேள்விப்பட்டிருக்கிறாயா?''

''ஆமாம்; பெரிய அரசியல்வாதியாச்சே!''

''நினைச்சேன். நீ இப்படித்தான் ஏதாவது உளறுவாய்ன்னு. அவர் பெரிய விஞ்ஞான மேதைடா. எங்கப்பா காலேஜிலே படிக்கிற போது....''

''ஏன்டா புருடா விடறே? உங்கப்பா எலிமென்டரி ஸ்கூலியே எட்டுத் தரம் கோட்டுன்னு சரளா சொல்லியிருக்கா!''

''சரி, விடு. காலேஜிலே எங்கப்பா அட்டென்டராக இருந்தபோது இந்த எட்கர் ஆலன் போ அங்கே புரொபஸர். ஆங்கிலோ இந்தியன். மேதாவியானதாலே பெரிய பதவி தருவதாகச் சொல்லி அமெரிக்காவுக்கு அழைச்சாங்க. மனுஷன் போகல்லையே! தலையெழுத்து, கடைசிவரையில் மாதம் ஐந்நூறு ரூபாய் சம்பளத்துக்கு உழைச்சுட்டு இந்த மண்ணிலேயே மண்டையைப் போட்டான். அந்தப் போவிடம் என் அப்பாவுக்கு ரொம்பப் பிரியம்; பக்தி. அதனால் அவன் பெயரையே எனக்கு வைச்சுட்டார்.''

''அந்தப் பெரிய மனுஷன் பேரைத் தாங்கிக்கிட்டு நீ இப்படிக் கில்லாடி வேலை பண்றே! அதுக்காக என்னடா அவலட்சணமா ஒரு பெயரையா வைப்பாங்க உனக்கு?''

''ஏன்டா, மனுஷனுக்கு 'ஐ. ஆர். எட்டு'ன்னு பெயர் வைக்கிறாங்க; நெல்லுக்குக் 'கருணா'ன்னு பெயர் வைக்கிறாங்க. இப்படியெல்லாம் நடக்கிறச்சே எனக்கு ஏன்டா 'போ'ன்னு பெயர் வைக்கக் கூடாது?''

''வைக்கலாம், வைக்கலாம்!'' என்று ஒப்புக்கொள்வதைத் தவிர வேறு வழி இல்லை மாலிக்கு. ''நாளைக்கு அந்தக் காவல்காரன் கிட்டே பேசிப் பார்க்கிறேன்'' என்று கூறி விட்டுச் சென்றான் அவன்.

\+ \+ \+

சிவப்பிரகாசத்தை வழிக்குக்கொண்டு வருவதென்பது அப்படி ஒன்றும் கஷ்டமான காரியமாக இல்லை. அவன் நேபாளி கூர்க்கா அல்ல; கூர்க் தேசத்தவன். மிலிட்டரியில் இருந்து ஓய்வு பெற்று வந்தவன். யூனிஃபாரமில் அவன் பெற்ற மெடல் ஒன்றும் கலர் கலராக ஒரு பட்டையும் பொருத்தப்பட்டிருக்கும். சென்னைக்கு வந்து அவனும் அவன் மகளும்

# You are safe with API

BRAKES

✻ *dependable*



CLUTCHES

✻ *smooth*



TIE ROD ENDS, STEERING LINKAGES AND KING PINS

✻ *precision-made*



AUTOMOBILE PRODUCTS OF INDIA LIMITED

API-116 R

எங்கெங்குமே—அழகிய சினிமா நட்சத்திரங்கள் தூய, மெல்லிளம் லக்ஸ் பற்றி என்ன கூறுகிறார்கள்—உங்களுக்குத் தெரியுமா?

வெள்ளித் திரையழகி
விஜயலலிதா
கூறுவது கேளீர் —

**'என் மேனியெழிலுக்கு மேலான ஆதரவு லக்ஸ்'**




நீங்களும் ஒருவரது இதயவானில் சுடர்விடுபவர்தானே—
உங்கள் மேனியெழிலையும் பராமரிக்கட்டும் **லக்ஸ்**

# இக்கட்டான நிலை; விடுபட்ட கலை!

எத்தனையோ நிகழ்ச்சிகள் நடக்க விருக்கும் போது எதிர்பாராத விதமாகப் பல இடைஞ்சல்கள் வரும். அவற்றைச் சமாளித்த விதம் ருசிகரமாயிருக்கும். □□□



ஆங்கில அரசாட்சி நடந்து கொண்டிருந்த காலம். சென்னை மாகாணக் கல்லூரியில் சென்னை கிரிக்கெட் சங்க ஆண்டு விழாவுக்குத் தலைமை வகிக்கச் சென்னை கவர்னர் ஆர்தர் ஹோப் வர விருந்தார்.

எம். ஸி. ஏ. தலைவரிடம் அச்சமயம் காரியதரிசியாக இருந்த திரு கே. எஸ். ரங்கா ராவ், "ஆண்டு விழாவில் தேநீர் விருந்தும் அளித்தால்தான் கூட்டம் நிறைய வரும். அதற்கும் ஏற்பாடு செய்து விடலாமே?" என்றார்.

"எம். ஸி. ஏ. கிரிக்கெட் ஆண்டு விழாவுக்குக் கவர்னர் வருகிறார். கூட்டம் நிச்சயம் வரும்!" என்று அடித்துச் சொல்லி விட்டார் எம். ஸி. ஏ. தலைவர்.

மாகாணக் கல்லூரி ஹாலில் நாலேமுக்கால் மணிக்கு எண்ணி ஐந்து பேரே கூடியிருந்தனர். கவர்னர் கலந்துகொள்ளும் கூட்டத்துக்கு ஐந்துபேர் இருப்பது தலைவருக்கும் பெருத்த அவமானமாகப் பட்டது. இன்னும் பதினைந்து நிமிஷத்தில் கவர்னர் வந்துவிடுவாரே! நிலைமையை எப்படிச் சமாளிப்பது?

கிரிக்கெட் சங்கக் காரியதரிசி திரு கே. எஸ். ரங்கா ராவ் அங்குமிங்கும் போனார். அச்சமயத்தில் மாகாணக் கல்லூரி மைதானத்தில் நானூறு மாணவர்கள் உடற்பயிற்சி செய்து கொண்டிருந்தனர். 'உடனே இவர்களை அழைத்து வந்து நிலைமையைச் சமாளித்தால் என்ன?' என்று தோன்றியது கிரிக்கெட் சங்கக் காரியதரிசிக்கு.

கவர்னர் வருவதால் அன்றைக் கூட்டத்துக்கு மாகாணக் கல்லூரி பிரின்ஸிபால் டேயும் வந்திருந்தார். அவரிடம் மாணவர்களை அழைத்துக் கூட்டத்தை இட்டு நிரப்பும் யோசனையைத் தெரிவித்தார் திரு ரங்கா ராவ்.

அவருக்கும் கூட்டக் குறைவு கஷ்டத்தைக் கொடுத்ததால் அதற்கு இசைந்தார். உடனே உடற்பயிற்சி ஆசிரியரிடம் சென்று பிரின்ஸிபாலின் கட்டளையைக் கூறினார் கிரிக்கெட் சங்கக் காரியதரிசி.

"ஓ! மாணவர்களே! உங்களுக்கு உடற்பயிற்சி வகுப்பு இப்பொழுதே முடிந்தது. ஆனால் அனைவரும் கூட்ட ஹாலுக்கு 'மார்ச்' செய்யவேணும்!" என்று கட்டளையிட்டார் உடற்பயிற்சி ஆசிரியர்.

நானூறு மாணவர்கள் கூட்ட ஹாலை அடைந்ததும் கவர்னர் ஆர்தர் ஹோப் தலைமை வகிக்க வந்து விட்டார். மாணவர்கள் ஒவ்வொரு பேச்சுக்கும் கைதட்டக் கூட்டம் களை கட்டி விட்டது.

கவர்னர் ஹோப் மிக்க சந்தோஷத்துடன் திரும்பினார்.

"அன்றையச் சம்பவத்துக்குப் பிறகு எம். ஸி. ஏ. ஆண்டு விழாவில் தேநீர் விருந்தளிக்கும் நிகழ்ச்சி இடம் பெற்று விட்டது!" என்று அந்த நாளையச் சம்பவத்தை நினைவுகூர்கிறார் முன்னாள் கிரிக்கெட் சங்கக் காரியதரிசி திரு கே. எஸ். ரங்கா ராவ். — குண்டுமணி



முக்கால் தமிழர்களாகி விட்டிருந்தார்கள். அவன் பெண் பிரமிளா அதிரூபவதி. தாயை இழந்த அவளைக் கண்ணும் கருத்துமாகப் பாதுகாத்து வந்தான். இரவுப் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டு உறங்கப் போகும் மாலை நேரச் சூரியனைப் பிரதிபலிக்கும் கண்ணாடி போல் சதா அவள் முகத்தில் இளம் செம்மை படர்ந்திருக்கும். மலைப் பிரதேசத்தில் பிறந்து வளர்ந்தவளாதலாலோ என்னமோ மேனி முழுவதும் ஒரு தளதளப்பு. கண்களில் குறும்புத்தனம் பளபளக்கும். வயதும் அப்படி ஒன்றும் குறைவில்லை. ஐந்தாறு வருஷங்களுக்கு முன்பே கல்யாணம் ஆகியிருக்க வேண்டியதுதான். ஆனால் கூர்க் பெண்ணாகிய அவளுக்குச் சென்னையில் துணை தேடுவது அவ்வளவு சுலபமாக இல்லை. வந்த சில வரன்களையும் சிவப்பிரஸாத் ஏதேதோ சாக்குப் போக்குச் சொல்லித் தட்டிக் கழித்தான். இதற்குத் தன் சுயநலம்தான் காரணம் என்பதை உணராமலேயே அப்படிச் செய்தான். மகளை விட்டுப் பிரிய அவனுக்கு மனமில்லை. தனிமை என்ற கொடுமையை அனுபவிக்க அவனுக்குத் தைரியம் இல்லை. மனைவியிடமிருந்த பிரேமையையும் பாசமாக மாற்றி மகளிடம் கொடுத்து வைத்திருந்தான் அவன். அவளுக்கு மட்டுமென்ன, தந்தையிடம் அன்பில்லையா? ஆனால் பருவம் அவளை விரட்டியது, தன்மையான அரவணைப்பை விடுத்துத் தகிக்கும் ஆலிங்கனத்தை ஏற்குமாறு. ஆனால் அவனோ அவள் உணர்ச்சிகளைப் புரிந்து கொள்ளாதது போலவே இருந்து வந்தான்.

அன்று விடுமுறையானதால் சிவப்பிரஸாத்தைப் பகல்நேரத்தில் ஹோட்டலுக்கு அழைத்துப் போய் உபசாரம் செய்தான் மாலி. "நேற்று மார்க்கெட்டில் பிரமிளாவைப் பார்த்தேனே" என்று ஏதோ திடும்மென்று நினைவுக்கு வந்து கூறுபவன் போல் சொன்னான். "ஆமாம், புடைவையில் மூணு இடத்திலே ஒட்டுப் போட்டுக் கட்டிக்கிட்டு வராளே, நல்லதா ஒண்ணு வாங்கித் தரப்படாது"

''எங்கே தம்பி?'' என்று அலுத்துக்கொண்டான் சிவப்பிரஸாத். ''வீட்டிலே இரண்டே பேரானாலும் வாங்கற சம்பளம் வேளைக்கு நன்றாகச் சாப்பிடக்கூடப் போத மாட்டேங்குது.''

''சம்பள உயர்வு கேட்டே போனிருக்கே?''

'''போ போ! உனக்கு இதே ஜோலியாப் போச்சு'ன்னு சொல்லி விரட்டியடிச்சுட்டாரு தம்பி! சும்மா தூங்கிக்கிட்டு இருக்கறதுக்குச் சம்பளம் வாங்கிறேனும். நான் தூங்கி இவர் பார்த்தாரா? ஒரு நாள் ராத்திரியாவது இவர் குறட்டை விடறதுக்குப் பதில் 'பிரஸ்' பக்கம் வந்து பார்த்தார்னு தெரியும், நான் எப்படி உழைக்கிறேன்னு. மிலிட்டரி ஆளு நான். நாட்டைக் காத்த உறுதியோடே இந்த அச்சகத்தையும் காப்பேன். டியூட்டி நேரத்திலே ஒரு நிமிஷம் உட்கார மாட்டேன், தம்பி. சதா பாரா சுத்திக்கிட்டே இருப்பேன்.''

''அது சரி. இப்படியே எத்தனை நாளைக்குக் காலத்தை ஓட்டறது? நாலு காசு சேர்க்க வேணுமா? பெண்ணுக்கு அழகா ஒரு நகை நட்டு பூட்டிப் பார்க்க வேணுமா? அவளுக்குக் கல்யாணம் ஆக வேணுமா?''

''அதுக்கெல்லாம் நான் எங்கே போறது? பணம் பண்ண வழி என்ன?''

''நல்ல வேளை, பணம் சம்பாதிக்க வழி என்னன்னு கேட்காமே பணம் பண்ண வழி என்னன்னு கேட்டே! சிவப்பிரஸாத், இதுக்குச் சுலபமா பதில் சொல்லிப்பிடலாம். பணம் பண்ணணும்னு கள்ள நோட்டு அச்சடிக்கணும்!''

சிவப்பிரஸாத் சிரித்தான். ''நல்லாத் தமாஷ் பண்றே தம்பி! எப்பவுமே ரொம்பக் குஷால் பேர்வழிதான் நீ!''

''அசடு! நான் ஜோக்கா சொன்னேன்? எதுக்குச் சிரிக்கிறே?'' என்றான் மாலி.

சிவப்பிரஸாத்தின் முகம் பேயறைந்தாற் போல் ஆயிற்று. ''தம்பி, என்ன சொல்லுறே நீ?''

''உஷ்! இரைந்து பேசாதே!'' என்ற மாலி திட்டத்தை விவரித்தான். கடைசியில் ''எங்களுக்குத் தேவை இரவு நேரத்தில் நாலு மணி நேரத்துக்கு உன்னிடம் இருக்கும் சாவிக் கொத்து. அவ்வளவுதான்'' என்றான்.

''தம்பி! சற்று முன்னால் கள்ள நோட்டு அடிக்கிறது பற்றிச் சொன்னே! இப்போ பூட்டைத் திறந்து கொண்டு கள்ளத்தனமா உள்ளே நுழையறது பற்றிப் பேசறே. டபிள் குற்றம்!''

''அதுக்குத் துணிஞ்சவன் இதுக்கும் துணியணும்.''

''அப்புறம் எதுக்கும் துணியணும் என் பாய் போலிருக்கே?''

''ஆமாம், துணியத்தான் வேண்டும்.''

''நாம் துணியப் போக, துணியைப் பிழியற மாதிரி நம்மைப் பிழிஞ்சு எடுத்துடுவாங்க தம்பி! வேண்டாம் இந்த விவகாரம்.''

''பயப்படாதே, தயங்காதே! சீக்கிரமா ஒரு முடிவுக்கு வா. 'தவறான ஒரு தீர்மானத்துக்குச் சீக்கிரமா வருவது சரியான தீர்மானத்துக்கு மிகவும் காலதாமதமாக வருவதைவிட நல்லது' என்று ஒரு பெரிய தலைவரே அரசு ஊழியர்களுக்குச் சொல்லியிருக்கார்! அவர் இழுத்துப் பறிச்சு யோசிச்சுக்கிட்டே இருக்காமல் சட்டுப் புட்டுன்னு காரியங்களை முடிக்கிறதிலே பேர் வாங்கினவர். அந்தமாதிரி நீயும் நடந்து கொள்ளணும்.''

சிவப்பிரஸாத் சற்று நேரம் மௌனமாக இருந்தான். பிறகு கேட்டான்: ''ஏன் தம்பி! இத்தனை தைரியமாக இதையெல்லாம் என்னிடம் விவரித்து விட்டாயே? நான் உங்களைக் காட்டிக் கொடுத்து விட்டால்?''

''மாட்டாய்'' என்றான் மாலி. அவன் வாயெல்லாம் பல்லாக இருந்தது. ''ஏன் தெரியுமா? அப்புறம் அச்சாகிற நோட்டுக்களிலே உனக்குப் பங்கில்லாமல் போய்விடும்! தலையை மேலும் கீழுமாக ஆட்டினால் மூணு லட்ச ரூபாய் உன் காலடியில் கிடக்கும். இடப்புறமும் வலப்புறமும் ஆட்டினால் பணம் வராது; ஆனால் உன் பெண் பிரமீளாவுக்கு ஏதாவது ஆபத்து வரும்!''

''அடப் பாவி! என் மகளை இதில் இழுக்காதே!''

''நான் அவளை ஒண்ணும் பண்ண மாட்டேன். ஆனால் அவள் இரவு நேரத்திலே வீட்டிலே தனியாகத்தானே இருக்கா? நீயோ டியூட்டிக்கு வந்துடறே. அப்போ வீட்டிலே ஒரு திருடன் புகுந்துட்டான்னு வைச்சுக்கோ. அங்கே வெறும் ஓட்டை உடைசல் தவிர வேறு ஒண்ணும் அவனுக்கு அகப்படலே. கோபம் வரது அந்தத் திருடனுக்கு. அப்போ காஷ்மீர் ஆப்பிள் மாதிரி தளதளன்னு ஒரு பெண் தன்னந் தனியா படுத்துத் தூங்கறதை அந்தத் திருடன் பார்க்கிறான். என்ன தோணும் அவனுக்கு?''

சிவப்பிரஸாதின் கண்கள் கலங்கிவிட்டன. 'இப்படியெல்லாம் பேச என்ன தைரியம்டா உனக்கு?' என்று அதட்ட நினைத்தான். அழுகைதான் வந்தது. இன்னுயிர் மகள் பிரமீளாவுக்கு ஒரு துன்பம் நேரக் கூடும் என்ற நினைப்பையே தாங்க முடியவில்லை அந்த வீரனால்.

மாலி அவனைத் தேற்றினான். ''அப்படியெல்லாம் ஒன்றும் நடந்து விடாது. சிவப்பிரஸாத்! பயப்படாதே! ஏனென்றால் நீதான் எங்களுடன் ஒத்துழைக்கப் போகிறாயே!''

''வேண்டாம், தம்பி!'' என்று நடுங்கும் குரலில் கூறினான் சிவப்பிரஸாத். ''உழைச்சுச் சம்பாதிக்கிற பணமே கையிலே நிற்கமாட்டேங்குது. கள்ள நோட்டு தங்குமா?''

''தங்கும்! சம்பாதிக்கிற பணத்துக்கு வரி உண்டு. லட்ச ரூபாய் ஒருவன் சிரமப்பட்டுச் சம்பாதிச்சால் கிட்டத்தட்ட எண்பதாயிரம் ரூபாயை வரி ராட்சதன் விழுங்கி ஏப்பம் விட்டுடுவான். ஆனால் இந்த வரும்படிக்குப் பைசாக்கூட வரி கிடையாது. உனக்குக் கிடைக்கப் போகிற ஐந்தாறு லட்சமும் டாக்ஸ் ஃப்ரீ வருமானம்!''



"ஸ்பெஷல் கிளாஸ்னு வீட்டிலே சொல்லிட்டுக் கிளம்பிட்டியே, நிஜந்தானா?"

"ஆமாம்! ஸ்பெஷல் தோசை ஃபர்ஸ்ட் க்ளாஸாகப் போடுறாங்க காலேஜ் கான்டீன்ல...!"





"கன்னக்கோல் வித்தவன் வீட்டில் கொன்னக்கோல் போட்டவன் ... ஸாரி! கொன்னக்கோல் வித்தவன் வீட்டில் கன்னக்கோல் போட்ட கள்வன் இவன்தான்..."

---

"தம்பி ! நீ மறுபடியும் தமாஷிலே இறங்கிட்டே. இந்த விவகாரம் மகா பாவம் ! வேண்டாம்."

"ஐயோ ! நீ பத்தாம் பசலியா யிருக்கே. இது மாடர்ன் உலகம். எது பாவம், எது புண்ணியம் என்கிறது காலத்துக்குக் காலம் மனத்துக்கு மனம் மாறுபடும் தன்மை உடையது. இதோ பார், இந்தோர் பல்கலைக் கழகமே இது போன்ற விஷயங்களில் நமக்கு வழிகாட்டியாக இருக்கிறது. நான் சொன்னால் தப்பாக இருக்கலாம். மெத்தப் படிச்சவங்க செய்யற தீர்மானம் குற்றமுள்ளதாயிருக்குமா ?"

"அப்படி என்ன முடிவு பண்ணினுங்க, இந்தோர் பல்கலைக் கழகத்திலே ?"

"'காப்பி அடிச்சா தப்பில்லே' அப்படின்னு முடிவு செய்திருக்காங்க! முன்பெல்லாம் ஒருத்தன் காப்பி அடிச்சால் அப்புறம் அவன் பரீட்சையே எழுத முடியாது. இப்போ ஐம்பது ரூபாய் அபராதம் கட்டிப்பிட்டு மறுபடியும் பரீட்சை எழுதலாம். மறுபடியும் காப்பி அடிக்கலாம் ! சாமர்த்தியம் இருந்தால் இந்தத் தடவை மாட்டிக்காமே காப்பி அடிச்சுப் பாஸ் பண்ணலாம்!"

"அதுக்கும் நீ ஈடுபட்டிருக்கிற இந்தக் காரியத்துக்கும் என்ன சம்பந்தம், தம்பி?"

"அப்படிக் கேளு! அவங்க பரீட்சையில் விடைத் தாளைக் காப்பி அடிக்கிறாங்க; நான் ரூபாய் நோட்டைக் காப்பி அடிக்கிறேன். அசல் போலவே நகல் தயாரிக்கிறேன். அவ்வளவுதானே ?"

"கண்டு பிடிச்சுட்டா அபராதத்தோடு போகாதே, தம்பி! கம்பி எண்ண வைச்சுடுவானே !"

"நீ ஒத்துழைத்தால் நாம் ஏன் மாட்டிக்கப் போறோம்?" என்றான் மாலி. "'சரி'ன்னு ஒரு வார்த்தை சொல்லு" என்று அவனை வற்புறுத்தினான்.

* * *

உதவுவதாகச் சொல்லிவிட்டு வந்தானே ஒழிய சிவப்பிரஸாத்துக்கு ஒரே திகிலாயிருந்தது. உடல் நடுங்கினால் எப்படியோ சமாளிக்கலாம்; உள்ளம் ஆட்டம் கண்டுவிட்டால் என்ன செய்ய முடியும்? அவன் இருதயம் 'தம் தம்' என்று மார்புக் கூட்டைத் தாக்கியது.

மாலியை வழி அனுப்பிவிட்டு அவன் நேரே குணசேகரன் வீட்டுக்குப் பஸ் ஏறிப் போய்ச் சேர்ந்தான். வழியெல்லாம் யோசித்தான். இரும்பிவிடலாமா? பிரமீளாவுக்கு ஆபத்து நேரும் என்றுனே பாவி! எஜமானிடம் விவரம் சொல்ல அவர் உடனே நடவடிக்கை எடுத்து போலீஸ் உதவியுடன் இந்தப் பசங்களைக் கம்பி எண்ண வைத்துவிட்டால் பிறகு பிரமீளாவுக்கு என்ன ஆபத்து எப்படி வரும்? ஒரு வேளை விடுதலை ஆன பிறகு அவர்கள் பழி வாங்க முற்படலாம். அதற்குள் இந்த ஊரை விட்டே போய் விட்டால் போகிறது ! பிரமீளாவுக்கு ஆபத்து வருவதானாலும் தன் உயிரைக் கொடுத்தாவது அவளைக் காப்பாற்ற முயல வேண்டுமே தவிர, பச்சைத் துரோகம் செய்து விட்டோமே என்ற குற்ற உணர்வுடன் சதா செத்துக் கொண்டே வாழ முடியுமா ?

இவ்வாறு தனக்குத் தானே தைரியம் சொல்லிக் கொண்டு குணசேகரனின் பங்களா வாசல்படியில் ஏறினான் சிவப்பிரஸாத். வாசல்புறம் வரவேற்பறையில் குணசேகரன் சோபாவில் அமர்ந்து ஏதோ ஒரு மர்ம நாவலைப் படித்துக் கொண்டிருந்தான். இவன் போன தருணத்தில் டெலிபோன் மணி அடிக்கவே ரிஸீவரை எடுத்துப் பேசினான் குணசேகரன். "ஹலோ ? யாரு? ஹலோ இன்ஸ்பெக்டர்! என்ன விஷயம்?"

'இன்ஸ்பெக்டர்' என்ற வார்த்தையைக் கேட்டதும் 'திக்'கென்று இருந்தது சிவப்பிரஸாத்துக்கு. 'அதற்குள்ளேயே எஜமானனுக்கு ஏதாவது விஷயம் தெரிந்து போய் இருக்குமோ ?'

"என்ன, உங்க பிரஸ்ஸெல்லாம் ஒழுங்கா நடக்குதா ?" என்று கேட்டார் இன்ஸ்பெக்டர். "என்ன பிரிண்ட் பண்ணிக்கிட்டிருக்கீங்க, இப்போ ?"

"நோட்டு அடிச்சுக்கிட்டு இருக்கோம். வந்து பார்க்கறீங்களா ?"

"ஸ்கூல் பசங்களுக்கா?"

''அந்த நோட்டு இல்லே, கரன்ஸி நோட்டு!''

'பகீர்' என்றிருந்தது சிவப்பிரஸாத்துக்கு. இன்ஸ்பெக்டரோ டெலிஃபோனில் அட்டகாசமாகச் சிரித்தார். ''பெஸ்ட் ஜோக் இது தான். எனக்குக்கூட பங்கு தர்றீங்களா?''

''ஸார்! ஸார்! இப்போ அச்சாகிக்கிட்டிருக்கிற பணம் எனக்கே போதாது போல இருக்கே!''

''ஓஹோ ஹோ! ஹஹ்ஹா! எனக்குப் பங்கு தரல்லேன்னு உங்களை ஜெயில்லே போட்டுடுவேன்! ஹஹ்ஹா! போதும், மிஸ்டர் குணசேகரன், போதும்! சிரிச்சுக் கண்ணீர் வந்துடுத்து. போதும்!''

''பின்னே என்ன ஸார், இன்ஸ்பெக்டர் ஒருத்தர் ஃபோன் செய்து பிரஸ் ஒழுங்கா நடக்கிறதா? என்ன பிரிண்ட் பண்ணிக்கிட்டிருக்கீங்கன்னு கேட்டால் நல்லாவா இருக்கு? ஏதோ சந்தேகப்பட்டு விசாரிக்கிற மாதிரி இல்லே தொனிக்குது?''

''சேச்சே! அதெல்லாம் ஒண்ணும் இல்லே. மிஸ்டேக் பண்ணிக்காதீங்க! ரொம்ப பிஸியா இருக்கீங்களா, இல்லே, மிஷினுக்குக் கொஞ்சம் ஓய்வு இருக்குமான்னு தெரிஞ்சுக்கக் கேட்டேன். அவ்வளவுதான்.''

''மூணு மிஷினும் எப்பவும் சுறுசுறுப்பா இயங்கிக்கிட்டேதான் இருக்கும், நம்ம அச்சகத்திலே. அதனால் என்ன? உங்களுக்கு என்ன வேணும் சொல்லுங்க. ஓடிக்கிட்டிருக்கிறதை இறக்கிப் போட்டுட்டு அடிச்சுத் தரேன்.''

''ஒண்ணுமில்லே, ஒரு மேரேஜ் இன்விடேஷன்.''

''பலே! யாருக்குக் கல்யாணம், உங்களுக்கா?''

''ஓய்! மறுபடியும் கிண்டலை ஆரம்பிச்சுட்டீங்களே! என் ஒய்ஃபோட தம்பியோட ஃப்ரண்டோட மச்சினனோட.....''

''போதும், போதும்! நீர் இன்விடேஷன் வாசகத்தை எழுதி அனுப்பிவிடும். வேறே ஒண்ணும் சொல்ல வேணும். ஒரே நாளிலே பிரிண்ட் பண்ணி அனுப்பிச்சுடறேன்.ஓ.கே?''

ஃபோனை வைத்து விட்டுத் திரும்பிச் சிவப்பிரஸாத்தைப் பார்த்தான் குணசேகரன். ''என்ன சங்கதி? பேயறைஞ்ச மாதிரி வந்து நிக்கறே?''

சிவப்பிரஸாத்துக்குச் சாதாரண நிலையிலேயே சரியாகத் தமிழ் பேச வராது. இப்போது ஒரே உளறலும் குளறலுமாக ஏதோ சொல்லி முடித்தான்.

''என்னய்யா, பேத்தறே! கள்ளனே வந்து தோட்டாலே அடிக்கிறானு?'' என்று கேட்கையிலேயே குணசேகரனுக்குப் பளிச்சென்று உண்மை புலனாயிற்று. கோபத்தில் சிவந்தது அவர் முகம். அடுத்த விநாடியே சிந்தனைக் கோடுகள் அவர் நெற்றியில் படர்ந்தன. மூன்றாவது விநாடியில் முகத்தில் புன்னகையுடன் சிவப்பிரஸாத்தைப் பார்த்துக் கூறினான்: ''இதோ பார், நீ எதுக்கும் கவலைப் படாதே. நான் இப்போ யார்கிட்டே டெலிஃபோனில் பேசிக்கிட்டிருந்தேன்,தெரியுமில்லையா? ஏதோ தமாஷாகத்தான் சொன்னேன். ஆனால் அந்த அக்கிரமம் உண்மையாகவே எனக்குத் தெரியாமல் என் பிரஸ்ஸிலேயே நடக்கிறது என்கிறாய் நீ. இன்ஸ்பெக்டர் எனக்கு பெஸ்ட் ஃப்ரண்டு. அவரையும் கலந்து ஆலோசிக்கிறேன். ஆனால், ஒண்ணு. அந்தச் சதிகாரர்களை இப்போ பிடிச்சா பிரயோஜனம் இல்லே. எந்தச் சாட்சியமும் நமக்கு அகப்படாது. அவங்க காரியத்தை நடத்தட்டும். நோட்டுக்கள் அச்சாகி முடியற சமயம் சுற்றி வளைக்கலாம். அதுவரையில் கண்டுக்கிடாத மாதிரி நடந்து கொள். அவர்கள் கோஷ்டியில் சேர்ந்துவிட்ட மாதிரியே நடி. அப்பப்போ ரகசியமா என்னிடம் வந்து எந்த அளவுக்கு முன்னேறியிருக்காங்கன்னு தகவல் சொல்லு. நான் இன்ஸ்பெக்டருடன் தொடர்பு வைச்சுக்கறேன். சரியான கட்டத்திலே அவர்களை நாம் கையும் மெய்யுமாய் அரெஸ்ட் பண்ணிவிடலாம். புரியறதா? இல்லே, ஹிந்தியில் ஒரு தடவை சொல்லட்டா?''

''வேண்டாம், வேண்டாம்!'' என்று அலறினான் சிவப்பிரஸாத். ''நான் தமிழில் பேசினால் உங்களுக்கு ஓரளவாவது புரியும்; நீங்க ஹிந்தியில் பேசினால் எனக்கு ஒண்ணுமே விளங்காது. இப்போ நீங்க சொன்னதே போதும். அப்படியே நடந்துக்கறேன்.''

''சரி, உனக்குச் சம்பள உயர்வு வேணும்னு கேட்டே இல்லே? நீ இவ்வளவு நம்பிக்கையான ஆளாக நேர்மையாக நடந்து கொள்கிறதாலே இருபத்தைந்து ரூபாய் சம்பளம் உசத்தியிருக்கேன். இதை யாரிடமும் சொல்லாதே. அந்தக் கோஷ்டிக்கு உன் பேரில் சந்தேகம் விழுந்துவிடும்.''

தலையாட்டிவிட்டு ஒரே உற்சாகத்துடன் வீடு வந்து சேர்ந்தான் சிவப்பிரஸாத்.

* * *

சிவப்பிரஸாத்தை மாலி அப்படி மிரட்டினானே ஒழிய உண்மையில் பிரமிளாவுக்கு ஒரு துரும்பை எடுத்துப் போடும் அளவுக்குக் கூடத் துன்பம் தர அவன் தயாராயில்லை. ஏனெனில், பிரமிளா மீது அவனுக்குக் காதல்! அதுவும் சமீப காலமாகத்தான் அவர்கள் நெருங்கிப் பழக ஆரம்பித்திருந்தார்கள்.

அவள் அங்காளம்மன் கோயிலுக்கு வரும் நேரம் தெரிந்து தப்பாமல் இவன் பக்கத்தில் உள்ள வெற்றிலை பாக்குக் கடைக்கு வந்து சேருவான். பெஞ்சில் சும்மா உட்கார்ந்திருக்க முடியாமல் எதையாவது வாங்கித் தின்பான். கடைக்காரனுக்கு நல்ல வியாபாரம் ஆயிற்று. பிரமிளா திரும்பிப் போகும்போது அவர்கள் கண்கள் முதலில் சந்தித்தன; பிறகு இருவரும் நோக்கிய விதத்தில் நெருக்கம் இருந்தது; அப்புறம் பார்வைகள் பின்னிக் கொண்டே விட்டன. ஒரு நாள், ''அப்பா சௌக்கியமா? நாங்க இரண்டு பேரும் ஒரே கம்பெனியிலே தான் வேலைசெய்யறோம். தெரியுமில்லையா?'' என்று பேச்சுக் கொடுத்தான்.

இது மாதிரி விவகாரங்களில் எப்போதுமே முதல் வாக்கியத்தைப் பேசத்தான் தயக்கம், சிரமம், சங்கடம், யோசனை எல்லாம். அந்த வேலியைத் தாண்டி விட்டால் அப்புறம் வார்த்தைகள் தங்கு தடையில்லாமல் ஓடும்!

அவன் அவளுக்கு ஐஸ் போட்ட ஃபாண்டா வாங்கிக் கொடுத்துவிட்டு, அவளைப் பார்க்கும் போதெல்லாம் தன் மனம் அப்படித்தான் குளிர்ந்து போவதாகச் சொன்னான்: ''உங்கள்

# இதைப்போன்ற சந்தர்ப்பங்களுக்கு இப்பொழுதே பணம் சேமிக்கத் தொடங்குங்கள்!





உங்கள் மகளின் திருமணத்திற்கோ,
மகனின் பல்கலைக் கழகப் படிப்பிற்கோ,
ஏன், ஒரு வீடுகட்டுவதற்கும்தான்
உங்களுக்கு பணம் தேவைப்படும்.
அலஹாபாத் பாங்கிடம் ஒவ்வொரு
வரின் தேவைகளுக்கேற்ற
சேமிப்புத் திட்டங்கள் இருக்கின்றன.

உங்கள் பணம் எப்படிப் பெருகி
வளர்கின்றது என்பதை நாங்கள்
விளக்கிக்கூற காத்திருக்கின்றோம்.
உங்கள் தேவைகளுடன் அருகிலிருக்கும்
அலஹாபாத் பாங்கின்
கிளையுடன் தொடர்பு
கொள்ளுங்கள்.



## அலஹாபாத் பாங்க்

ஹெட் ஆபீஸ்
14, இந்தியா எக்ஸ்சேஞ்ச் பிளேஸ், கல்கத்தா-1

பொருளாதாரத்தின் அடித்தளத்தைப் பலப்படுத்துகிறது

மனம் குளிர்ந்து போகிறது. என் உள்ளம் கரைந்தே போகிறது'' என்றான் அவன்.

''இதோ, இந்த ஐஸ் கட்டி மாதிரி. இன்னும் கொஞ்ச நேரம் போனால் இந்தப் பானம் வேறு, ஐஸ்வேறு என்று இராது. ஐஸ் உருகிப் பானத்தோடேயே ஒன்றாகிவிடும்! எனக்கென்று ஒரு மனம் இருப்பது போலவே எனக்குத் தோன்றவில்லை. அது உங்கள் உள்ளத்துள் புகுந்து மிகுந்து கரைந்து உங்கள் உள்ளமாகவே ஆகிவிட்டது!''

இந்த அளவுக்கு இவர்கள் நெருங்கி வந்துவிட்டது சிவப்பிரஸாத்துக்குத் தெரியாது. அவ்வாறு தெரிந்திருந்தால் மாலி அவளை மிரட்டியிருக்க முடியுமா? 'நீயாவது பிரமிளாவுக்குத் தீங்கு இழைக்கவாவது? கனவில்கூட உன்னால் நினைக்க முடியாத காரியமாயிற்றே அது' என்று சிவப்பிரஸாத் சிரித்துவிட்டுப் போயிருக்கமாட்டாரா அலட்சியமாக? அப்புறம் போ அன்டு கோ போட்ட திட்டங்கள் என்ன ஆவது?

இன்று அங்காளம்மன் கோயிலுக்குப் போய்விட்டு அப்பால் - சற்றுத் தொலைவில் வெட்டவெளியைக் காவல் காக்க நின்ற ஒற்றைப் புளியமரத்தினடியில் அதன் வேர்மீது அமர்ந்து மாலியின் வருகைக்குக் காத்திருந்தாள் பிரமிளா.

அவன் வந்ததும் வராததுமாக அவள் கேட்ட முதல் கேள்வி: ''அப்பா ஒரிரு நாட்களாக ஏதோ மாதிரி இருக்கிறாரே. அச்சகத்தில் ஏதாவது தகராறு?''

''ஓ, அதுவா?'' என்று நீட்டி முழக்கி யோசிக்க ஒரு சில விநாடிகள் உண்டாக்கிக் கொண்டான் மாலி. ''சம்பள உயர்வு கேட்டார் போலிருக்கு. அப்போ முதலாளி ஏதோ திட்டி அனுப்பிச்சுட்டதாகச் சொல்லிக்கிட்டிருந்தார். விடக்கு விடு! வருத்தமோ கஷ்டமோ எல்லாம் இன்னும் கொஞ்ச நாளைக்குத்தானே. உன்னை நான் கல்யாணம் கட்டிக்கிட்டு ராணி மாதிரி வைச்சுக்கப் போறேனே. அதைப் பார்த்ததும் சந்தோஷம் அவருக்குத் தன்னாலே வந்து சேர்ந்துடுமே.''

''என்றைக்குமே உங்கள் இதயராணிதான் நான்'' என்றாள் பிரமிளா.

''அது சினிமா பாஷை! நான் அதைச் சொல்லலே. உன்னை நிஜமாகவே ராணி மாதிரி வைத்துக் கொண்டிருப்பேன். கார், பங்களா, வேலைக்காரங்க, ஏஸி பெட்ரூம், பெனாரஸ் சில்க் புடவை, வைர நெக்லஸ், தங்க வளையல்......''

''இப்போ நீங்க பேசறது மட்டும் சினிமா பாஷை இல்லையா?'' என்று கேட்டுச் சிரித்தாள் பிரமிளா.

''இல்லே. இவற்றையெல்லாம் கண்ணுக்கு மெய்யா நீ பார்க்கத்தான் போறே!''

''லாட்டரியிலே பரிசு விழுந்திருக்கா?'' என்று மலர்ந்த முகத்துடன் வினவினாள் அவள்.

''லாட்டரின்னதும் பாட்டரி விளக்கு மாதிரி முகம் பிரகாசமாகுதே! அப்படித்தான் வைச்சுக்கோயேன். ஐந்து லட்சம் முதல் பரிசு விழுந்ததாக!''

பிரமிளாவுக்கு ஆனந்தம் அளவு கடந்து பெருக, அவள் சுற்றுச் சூழலைக்கூட ஒரிரு கணங்களுக்கு மறந்து அவன் உடம்பெல்லாம் புல்லரிக்கும்படி செய்து விட்டு வேகமாக ஓடியே விட்டாள்!

* * *

பிரமிளாவால் அன்று இரவு இந்த நற்செய்தியைத் தன் தகப்பனாரிடம் சொல்லாமல் இருக்க முடியவில்லை. ''அப்பா! உங்க கம்பெனியிலேயே வேலை செய்யறாரே, மாலின்னு ஒருத்தர், அவருக்கு ஐந்து லட்ச ரூபாய் லாட்டரியிலே விழுந்திருக்காம்'' என்றாள் அடக்கமாட்டாத ஆர்வத்தோடு.

சீண்டப்பட்ட நாகம் போல் விசுக்கென்று நிமிர்ந்து உட்கார்ந்தான் சிவப்பிரஸாத்...... ''அவனை நீ எங்கே பார்த்தே? அவனுக்கும் உனக்கும் என்ன பேச்சு?''

இனி மறைப்பதில் ஒன்றும் அர்த்தமில்லை என்று தோன்றிவிட்டது பிரமிளாவுக்கு. எப்படியும் ஒரு நாள் தெரிய வேண்டியது தானே? மேலும் இதில் தப்போ தவறோ என்ன இருக்கிறது? நமது கஷ்டங்களுக்கெல்லாம் முடிவு காலம் வரப் போகிறதென்றால், அதைக் கை நீட்டி வரவேற்க வேண்டியது தானே?

ஆனால் சிவப்பிரஸாத் அவள் எதிர்பார்த்தது போல் மகிழ்ச்சியில் துள்ளவில்லை...... ''அவனை நீ மறந்துவிடு அம்மா!'' என்றான் அமைதியாக.

''என்னப்பா, சொல்றீங்க?''

''அவன் சீக்கிரமே கம்பி எண்ணப் போகிறான், பிரமிளா!''

''அப்படியானால் நானும் ஏதாவது தப்பு செய்துட்டு, அவரோடேயே கம்பி எண்ணப் போறேன், அப்பா!''

''கழுதை! ஒரு காவல்காரன் மகள் பேசுகிற பேச்சா இது?'' என்று கேட்டு அறைந்து விட்டான், சிவப்பிரஸாத். சிவந்து விட்ட கன்னத்தைத் தடவிக் கொண்டே கண்களில் நீர் ததும்ப நின்றாள் பிரமிளா. ''தப்பு பண்ணத் துணியற அளவுக்கு அது என்ன காதல்? மனசை அடக்க முடியாமல்தான் நம் நாடு இந்தக் கதிக்கு வந்திருக்கிறது. உனக்குக் காதல் ஆசை. இன்னொருத்தனுக்குப் பதவி ஆசை. வேறு ஒருத்தனுக்குப் பணத்தாசை!''

''என்னப்பா, மாலி என்னிடம் ரொம்பப் பிரியமா இருக்கார். அவரைக் கல்யாணம் பண்ணிக்கிறேன் என்கிறேன்.... நீங்க நாட்டைக் காப்பாத்ற வழி சொல்றீங்களே!''

''இல்லேம்மா. வீட்டைப் பத்தித்தான் பேசறேன். இதோ பார், காந்தி படம் மாட்டி வைச்சிருக்கியே, இவர் என்ன சொன்னார், தெரியுமா? 'தேசத்தைப் பற்றிக் கவலைப்படாதே. உன்வரைக்கும் நீ யோக்கியமாயிரு. தேசம் திருந்தும்' என்றார். ஆனால் இன்னிக்கு நடக்கிறது என்ன? ஒவ்வொருத்தனும் 'நான் ஒருவன் யோக்கியமா இருந்துட்டா ஆச்சா? உலகம் திருந்திடப் போறதா?' என்று தனக்குத்தானே சால்ஜாப்பு சொல்லிக்கிட்டுத் தப்புத் தண்டாவிலே இறங்கறான். இந்த நாடு எப்படி உருப்படும்?''

''இப்போ மாலி என்ன தப்பு பண்ணிட்டாரு?''

"அதெல்லாம் என்னை ஒண்ணும் கேட்காதே. அவனையே நினைச்சுக்கிட்டிருந்தா ஏமாந்து போவே! அவனை மறந்துடு; அவ்வளவுதான்....ஆங்...இன்னொண்ணு! நான் இப்படிப் பேசியதாக அவன்கிட்டே சொன்னே, அப்புறம் என்னை உயிரோடே பார்க்க முடியாது!"

பிரமிளா மிரண்டு போய் விட்டாள். 'அப்பா விளையாட்டுக்காகச் சொல்லவில்லை. ஏதோ பெரிய விபரீதம் நேரப் போகிறது. அதன் மத்தியிலேயே நாம் இருந்தும் அதை இனம் கண்டு கொள்ள முடியவில்லை.' மௌனமாக அழுவதைத் தவிர அவளுக்கு வேறு எதுவும் செய்யத் தோன்றவில்லை.

* * *

அடுத்த தடவை குணசேகரனைச் சிவப்பிரஸாத் சந்தித்தபோது காவல்காரன் ரொம்பவும் கலக்கமடைந்திருந்தான். "நோட்டுக்களை அச்சடிக்கக் குவிக்கிறாங்களே, நீங்க சும்மா இருக்கீங்களே?" என்று அங்கலாய்த்துப் புலம்பினான்.

"உஷ், இரையாதே! பதற்றப்படாமல் நடந்ததைச் சொல்லு. ஒன்றும் குடிமுழுகிப் போய்விடவில்லை" என்றான் குணசேகரன். அவனை வரவேற்பறைக்குள்ளே அழைத்துப் போய் அமரச் சொன்னான். சிவப்பிரஸாத் ஆசனத்தை மறுத்துவிட்டு நின்று கொண்டே இருக்கையில் குணசேகரன் அறைக் கதவைத் தாளிட்டுவிட்டு வந்தான்.

"பத்து ரூபாய் நோட்டுக்கள் ஷீட் ஷீட்டாக அச்சாகுது, ஐயா! ஒவ்வொரு ஷீட்டிலேயும் நூறு நோட்டாவது தேறும்!" என்று அவசர உணர்வோடு பேசினான் சிவப்பிரஸாத்.

"அப்படியா?" குணசேகரன் உற்சாகமாகக் காணப்பட்டார். சிகரெட் ஒன்றைக் கொளுத்திக் கொண்டு சோபாவில் சாய்ந்து உட்கார்ந்தார். "உம்! எல்லாம் விவரமாகச் சொல்லு!"

"முன் பக்கம் பின் பக்கம் இரண்டும் பிரிண்ட் பண்ணியாச்சு. ஸீரியல் நம்பரும் வாட்டர் மார்க்கும்தான் பாக்கி."

"அதையும் நாளை அல்லது மறுநாளைக்குள் முடிச்சுடுவானுங்க. எமகாதகப் பயல்கள். எனக்குத் தெரியாதா போவும் மாலியும் எவ்வளவு கெட்டிக்காரர்கள் என்று?"

"நீங்க சீக்கிரம் ஃபோன் பண்ணுங்க ஐயா. இன்ஸ்பெக்டருக்கு."

"பொறு, பொறு! அவங்க பிளானை முழுமையாகத் தெரிஞ்சுக்கணும் நாம். அதனாலே என்னென்ன பேசிக்கிட்டாங்க, என்னென்ன நடந்தது என்று எல்லா விவரமும் ஒண்ணு விடாமல் சொல்லு, பார்க்கலாம்" என்றான் குணசேகரன், கதை கேட்கும் சிறுவனின் ஆர்வத்துடன்.

"நினைச்சுப் பார்த்தால் வேடிக்கையாகக் கூட இருக்குங்க. முந்தாநாள் மாலி, லுங்கி கட்டிக்கிட்டு வந்தான். அதிலே நோட்டு நோட்டா அச்சடிச்சிருந்தது. 'இது என்ன வேஷம்'னேன். 'இது மாதிரி ஒரு லுங்கிக் கடையிலே பார்த்தேன். நம்ம தொழிலுக்குப் பொருத்தமா இருக்கேன்னு ஒரு டஜன் வாங்கிப் போட நினைச்சேன். இரண்டு வாங்

அட்டைப்பட விளக்கம்

## குறைவிலா நிறைவு

ஒரு குறையை இன்னொரு நிறைவினால் ஈடுபடுத்திக் கொண்டு மனத்திருப்தி அடைந்துவிட முடியும். ஆனால் குழந்தை இல்லாக் குறையை மட்டும் எந்த ஒரு நிறைவைக் கொண்டும் ஈடுபடுத்தித் திருப்தியடைய முடியாது.

இந்த இதழ் கல்கி மேலட்டைக்கு எழில் ஊட்டும் இந்த அழகுப் பாப்பா வாழைப்பழம் இன்னும் அழகு, எழிலுக்கு எழில் சேர்க்கும் பேரெழிலாக விளங்குகிறது. பிரயாண முஸ்தீபுகளோடு பெட்டியின்மேல் அமர்ந்திருக்கும் இந்தப் பாப்பாவின் கவலையற்ற முகத்தைப் பாருங்கள்!

"பொன்னுடைய ரேனும்
புகழுடைய ரேனும்
என்னுடைய ரேனும்
உடையரோ?
—இன்னடிசில்
புக்களையும் தாமரைக்கை
பூநாறும் செய்யவாய்
மக்களை இல்லாதவர்."

என்ற ஆன்றோர் வாக்கில்தான் எத்தனை உண்மை!

போட்டோ: துரைலிங்கம்

கத்தான் பணம் இருந்தது. வாங்கிண்டு வந்துட்டேன்' என்றான்."

"அதாவது லுங்கியிலே ரூபாய் நோட்டு டிஸைன்! பலே! அப்புறம் போ எப்போ வந்தான்?"

"சீக்கிரமே வந்துட்டான். சைக்கிள் காரியர்லே அவன் பெண்டாட்டியையும் பின்னாடு ஏத்திக்கிட்டு வந்துட்டான்!".

"போடு தப்பல்லன்னும்!"

"அவங்க வந்தவுடனேயே சண்டையும் வந்துடுத்து."

"சண்டையா? எதுக்கு?"

"'இவளை எதுக்கு அழைச்சுக்கிட்டு வந்தே'ன்னு மாலி கேட்டான். அதுக்கு போ, 'எனக்குள்ள குடிப் பழக்கத்தை மாத்தறதுக்காக என்னைத் தினம் நைட் ஷோவுக்கு அழைச்சுக்கிட்டுப் போறதாகப் பக்கத்து வீட்டுக்காரங்ககிட்டே இவள் சொல்லிட்டு வந்திருக்கா'ன்னு பதில் சொன்னான். அதற்குள், போவுடைய சம்சாரம் தானும் உதவி பண்ண வந்திருப்பதாயும் அதனால் அச்சடிக்கும் நோட்டுக்களில் தனக்குத் தனியே ஒரு பங்கு உண்டு என்றும் சொன்னாள். மாலி வந்து அவங்க ரெண்டு பேருக்கும் சேர்த்து ஒரு பங்குதான் என்றான். 'சரளாவை யார் வரச் சொன்னது? அவள் என்ன உதவி பண்ணிவிட முடியும்?' என்று வாதாடினான்.

"'நான் ஆரம்பத்திலிருந்தே அருமையான யோசனைகள் சொல்லிக் கொண்டு வந்திருக்கிறேன்' என்றாள் சரளா.

"'என்ன யோசனை? ஆரம்ப விழாவுக்கு அமைச்சரைக் கூப்பிடு: காவல்காரன்

மூக்கிலே குளோரபாரம் ஏத்துங்கிற மாதிரி அசட்டு யோசனைகள்தானே. சமைத்துப் போட்டேனே என்று வெறுமனாலும் சொல்லு சரளா, ஒத்துக் கொள்கிறேன்!' என்று மாலி விட்டுக் கொடுக்காமல் பேசினான்.''

குணசேகரன் குபீரென்று சிரித்தான். ''பேஷ்! நன்றாயிருக்கிறதே, இந்த நாடகம். இன்னும் என்னவெல்லாம் வேடிக்கையோ?''

''ஆமாங்க, நினைச்சுப் பார்த்தா வேடிக்கையாகவும் இருக்கு; பயங்கரமாயும்தோணுது.''

''பயங்கரத்தைத்தான் ஆரம்பத்திலேயே சொல்லிட்டியே! வேடிக்கையைச் சொல்லு!''

இப்போது ஜெப்பிரஸாத்துக்கே கதை கூறுகிற உற்சாகம் பிறந்து விட்டது. சாங்கோபாங்கமாக எடுத்துரைத்தான்.

''அதிலே பாருங்க, முதல்லே ஒரு அசல் நோட்டை வைச்சுத்தானே ரூபாய் நோட்டுக்கான பிளாக் தயாரிக்கணும்? போ ஒரு புத்தம் புதிய பத்து ரூபாய் நோட்டை எடுத்துக் ஃபோட்டோகிராஃப் மிஷின் மேலே வைச்சான். 'அடப்பாவி'ன்னு என்னை அறியாமல் கூச்சல் போட்டுட்டேன். ஏன் தெரியுங்களா? அந்தப் பத்து ரூபாய் நோட்டிலே காந்தித் தாத்தா படம் இருந்தது! 'டேய், காந்தித் தாத்தாவை இதில் இழுக்காதே'ன்னு அதட்டினேன்.''

''ரொம்ப நியாயம்'' என்று ஒப்புக் கொண்டார் குணசேகரன்.

''அதை அவங்களும் ஏத்துக்கிட்டாங்க. அப்புறம் மாலி ஒரு படகுப் பொம்மை போட்ட பத்து ரூபாய் நோட்டை எடுத்து வைச்சான். அதைப் போ தூக்கி எறிஞ்சான். என்னு, அது அழுக்கு நோட்டாம். புத்தம் புதுசா இருக்கணுமாம். பிளாக் பண்ண.

''இரண்டு பேரும் சேர்ந்து என்னைப் பார்த்தாங்க. நான் அதிலே சம்பந்தப்பட விரும்பாததாலே என்கிட்டே ஒரு ரூபாய் நோட்டுத்தான் இருக்குன்னு புளுகிட்டேன். அப்போ 'நான் என்ன உதவி பண்ணப் போறேன்னு கேட்டீங்களே; இதோ பாருங்க என் முதல் உதவி'ன்னு சொல்லி, சரளா கைப் பையிலேயிருந்து புத்தம் புதிய படகு போட்ட பத்து ரூபாய் நோட்டை எடுத்துக் கொடுத்தது.''

''நிஜமாகவே அது முதல் உதவிதான்'' என்றான் குணசேகரன். ''இல்லாவிட்டால் பட்ட காயம் புரையோடிப் போயிருக்கும்! அப்புறம்?''

''ஆனாலும் சரளாவுக்குக் கொஞ்சம் வருத்தம். ஐந்து ரூபாய் நோட்டுக்கான பிளாக் தயாரிக்க அச்சடிப்பாங்கன்னு நினைச்சு அவள் பச்சைப் புடவை கட்டிண்டு வந்துட்டாளாம். 'பத்து ரூபாய் நோட்டுத்தான் முதல்லே அடிப்பீங்கன்னு தெரிஞ்சிருந்தால் பழுப்பும் சிவப்பும் கலந்த அதே அழுக்குக் கலர் புடவை கட்டிண்டு வந்திருப்பேனே'ன்னு வருத்தப்பட்டாங்க. மாட்சிங்கா இல்லையாம்!''

குலுங்கக்குலுங்கச் சிரித்தான் குணசேகரன். ''சக்கைப் போடு! இவ்வளவுதானா? இன்னும் பாக்கியிருக்கா?'' என்று கேட்ட வண்ணம் மீண்டும் சிரித்தான்.

''நீங்க சிரிக்கிறதைப் பார்த்தா எனக்குக் கொஞ்சம் தைரியம் வரது; ஆனால் கூடவே அச்சத்தில் இரவில் நடந்ததையெல்லாம் நினைச்சா திகிலா இருக்கு. பூஜையெல்லாம் பலமா போட்டு ஆரம்பிச்சிருக்காங்க, வெற்றி அவங்க பக்கம் போயிட்டா என்ன பண்றது?''

''ஓ! பூஜை வேறு போட்டாங்களா? ஆமாம், ஆமாம். கள்ளனும் கன்னக் கோலை ஆயுத பூஜையன்று கும்பிடுவானே! ஜெப்பிரஸாத்! எனக்கு மட்டும் அதிகாரம் இருந்ததுன்னு இந்தப் போவுக்கு ஒரு டாக்டர் பட்டமே கொடுப்பேன்! கள்ள நோட்டு அடிக்கிறதிலே எத்தனை கலை உணர்வு காட்டிக் காரியம் பண்ணுகிறான் பார்த்தியா!''

'' அது என்ன கலையோ எனக்கு வயித்தைக் கலக்குது.''

''பயப்படாதே! இன்னும் ரெண்டு நாள் போகட்டும். ஐந்து ரூபாய் நோட்டையும் அச்சடித்துத் தள்ளட்டும். ஸீரியல் நம்பரையும் வாட்டர் மார்க்கையும் போடட்டும்....''

'' அப்புறம் அவங்க கம்பி நீட்டிட்டுப் போயிடட்டும். நாம வாயிலே விரலை வைச்சுக்கிட்டு உட்கார்ந்திருக்கலாம்....! என்னங்க இது, நெருப்போடே விளையாட்டு?''

''நம்மைச் சுடுவதற்கு முன்னால் தண்ணியைக் கொட்டி அணைச்சு விடலாம். ஆனால் பாரு, அவங்க பேரிலே நிறையக் குற்றம் ருசுவானால்தான் பெரிய தண்டனை கிடைக்கும். இப்பவே பிடிச்சுட்டோமென்றால் தண்டனை குறைந்துவிடும். நீ தைரியமாயிரு. இன்றிரவு நடப்பதைப் பார்த்துக் கொண்டு நாளை வந்து சொல்லு!'' குணசேகரன் அவனை அனுப்பி வைத்தான்.

அதன்படி மறுநாளும், அதற்கு அடுத்த நாளும் காலையில் குணசேகரனைப் பார்த்து விட்டு வந்தான் ஜெப்பிரஸாத். நோட்டு அச்சடிக்கும் வேலை நாலு இரவுகள் நடந்திருந்தன. ஐந்தாம் நாளன்று காலையில், ''இன்று இரவோடு எல்லா வேலையும் முடிஞ்சுடுங்க; நோட்டுக்களை ஸ்டேபிள் பண்ணி 'பண்டில்' போட வேண்டியதுதான் பாக்கி. காரியம் முடிஞ்ச கையோடு நம்ம பிரஸ் வேனிலேயே கள்ள நோட்டுக்களையும் அவற்றைத் தயாரிக்கப் பயன்பட்ட பிளாக்குகளையும் ஏத்திக்கிட்டுக் கிளம்பிடப் போறாங்க. 'என் மகளையும் அழைச்சுக்கிட்டு நானும் அவங்களோடு வந்துடப் போறதாக என்னவிக்கிட்டிருக்காங்க'' என்றான் ஜெப்பிரஸாத்.

''எங்கே போறதா உத்தேசம்?''

''முதல்லே பங்களூர் போறாங்க. போகிற வழியிலே இரவோடு இரவா ஏகாந்தமான ஒரு பிரதேசத்தில் வண்டியை நிறுத்திப் பிளாக்குகளையும் காகிதப் புரூப் போன்ற இதர வேண்டாத பொருள்களையும் ஆழக் குழி தோண்டிப் புதைக்கப் போறாங்க. அப்புறம் அங்கேயே வானுக்குள் உட்கார்ந்தபடியே பணத்தை நாலாகப் பங்கிட்டுக் கொள்ளப் போறாங்க. ஆளுக்கொரு ஸூட்கேஸ். அது நிறையப் பணம். அதிகாலையில் பங்களூரை அடைந்ததும் வானை அங்கேயே விட்டு விட்டு மூன்றாகப் பிரிந்து மூன்று திசைகளில் ரயில் ஏறிக் கிளம்பி விடணும்னு திட்டம். வான் பத்தி நீங்க போலீஸ் கம்ப்ளெய்ண்ட் கொடுக்கலாம் அல்லவா? அதனால் அதை அங்கேயே விட்டு விட்டுப் போயிடறதாக ஏற்பாடு...''

''அருமையான யோசனைகள். தனித் தனியா பிரிஞ்சுட்டா யாராவது ஒருத்தர் கள்ளநோட்டு வச்சிருந்ததாக மாட்டிக் கிட்டாலும் பாக்கிப்பேர் பாதிக்கப்பட மாட்டாங்க, இல்லையா?''

''ஆனால் நீங்கதான் வானைக் காணோம்னு போலீஸ் கம்ப்ளெய்ண்ட் கொடுக்கப் போறதில்லையே; அதுக்கு முன்னால் இப்பவே அவங்க கள்ள நோட்டு அச்சடிச்சதாகவே புகார் பண்ணப் போறீங்களே! பாவம், இது அவங்களுக்குத் தெரியாமே ஒரே மிதப்பிலே இருக்காங்க!''

''கரெக்ட்! நீ போ. வழக்கம் போல் அவர்களுடன் சேர்ந்துக்கிட்டு இரு. நான் இரவு போலீஸோடன் வருகிறேன். கையும் மெய்யுமாகப் பிடிக்கலாம்.''

''ஐயோ, நான் அங்கே இருக்கிறதாலே என்னையும் சந்தேகித்துப் போலீஸ்காரங்க எனக்கும் விலங்கு பூட்டிட்டா என்ன செய்வேன்? பிரமிளா உயிரையே விட்டுடுவாளே!''

''சேச்சே! நீ இல்லாமே இந்தத் திட்டம் எப்படி அம்பலமாகி இருக்க முடியும்? உன் ஒத்துழைப்பு இருப்பதால்தானே அவர்களுக்கு இப்போ காப்புப் போடப் போகிறோம்! கவலைப் படாமல் போ. உனக்கு விசேஷப் பரிசு கிடைக்கும். உன் மகளோடு சந்தோஷமாக வாழலாம்.''

மகிழ்ச்சியோடு திரும்பினான் சிவப்பிரசாத். ஆனாலும் மனத்துக்குள் ஓர் உறுத்தல். 'எஜமான் உடனே ஏன் இன்ஸ்பெக்டருக்கு ஃபோன் செய்யவில்லை? என் எதிரிலேயே டெலிஃபோன் பண்ணக் கூடாதா?

'சேச்சே! என்ன அர்த்தமில்லாத சந்தேகங்கள். இன்ஸ்பெக்டர் இவருக்கு நெருங்கிய நண்பராயிற்றே! அன்றுகூட ஃபோனில் சிரிச்சுப் பேசிக்கிட்டிருந்தாங்களே. அப்பப்போ அவருக்குத் தகவல் கொடுத்துக்கிட்டுத்தான் இருப்பார்.

'அப்படித் தகவல் தரவில்லையென்றால் எஜமானனுக்கு என்ன லாபம் அதில்? நஷ்டம் தான்! இந்தக் காரியத்துக்கு உடந்தையாக இருந்ததாக அவர் மீதும் பழி சுமத்தப்படும் அல்லவா? ஒருவேளை அப்படியும் இருக்குமோ? இவரும் போவுடைய கூட்டாளியோ? அல்லது இவர் சொல்படிதான் போ காரியங்களைச் செய்து கொண்டிருக்கிறானோ? சீசீ! என்ன பைத்தியக்காரத்தனமான யோசனை! அவ்வாறு இருக்குமானால் என்னிடம் இவ்வளவெல்லாம் பேசிய போவும் மாலியும் இது பற்றியும் ஒரு வார்த்தை சொல்லியிருக்க மாட்டார்களா?'

வீடு போய்ச் சேர்ந்த சிவப்பிரஸாத்துக்குப் பகல் முழுவதும் தூக்கம் சரியாக வரவில்லை. அரைகுறை நித்திரை, பயங்கரக் கனவுகள். மாலை நாலு மணி சுமாருக்கு அவன் குளித்து விட்டு டியூட்டிக்குக் கிளம்பத் தயாரானான். அலமாரியைத் திறந்தான், புத்துடை எடுக்க. அப்போது அவன் கண்ணில் பட்டது ஒரு 'லாண்ட் மைன்.'

ராணுவத்தில் அவன் ஒரு 'மைன'ராகப் பணியாற்றியிருக்கிறான். பூமி மட்டத்துக்குச் சற்றுக் கீழே எதிரியின் கண்ணுக்குத் தென்படாத விதமாக வெடிகளை வைத்துவிட்டு வருவதில் அவனுக்கு ரொம்ப அனுபவம் உண்டு. எதிரி முன்னேறி வரும்போது இவை சற்று அழுத்தம் மிகுந்ததுமே வெடித்து மனிதர்களாயினும் வாகனங்களாயினும் சின்னாபின்னப்படுத்தும். இந்த 'லாண்ட் மைன்'களில் இரண்டினை இவன் ஞாபகார்த்தமாக ராணுவத்திலிருந்து ஓய்வு பெற்றபோது தன்னுடன் எடுத்து வந்திருந்தான். சட்டப்படி இது குற்றம்தான். ராணுவம் இதை அனுமதிக்கவில்லை என்பதும் வாஸ்தவம்தான். ஆனால் எந்த உயிராபத்தான பொருளுடன் அவன் தன் ராணுவ வாழ்க்கை முழுவதும் கழித்தானோ அந்தப் பொருளை மாதிரிக்கு ஒன்றிரண்டேனும் தன்னுடன் வீட்டில் வைத்திருக்க அவன் ஆசைப்பட்டான். அதைப் பார்க்கும்போதெல்லாம் அவனுக்குப் பழைய சம்பவங்கள், தனது வீர சாகசங்கள் நினைவுக்கு வந்து புன்னகையைத் தருவிக்கும். விளையாட்டுப் போல் வெடி மருந்துகளுடன் உறவாடி எத்தனை உயிர்களைப் பலி வாங்கி இருக்கிறோம் என்று எண்ணும்போது துயரமும் ஏற்படும்.

இப்போது அந்த லாண்ட் மைன்கள் இரண்டு அவனிடம் இருந்தன. இத்தனை நாட்கள் ஆனாலும் கூட இவ்விஷயத்தில் நிபுணனான அவனால் அவற்றை நன்றாக இயங்கச் செய்ய முடியும். அவற்றை இப்போது முக்கியமான ஒரு காரியத்துக்குப் பயன்படுத்த வேண்டியது அவசியம் என்று அவனுக்குத் தோன்றியது.

அச்சகத்துக்கு இரண்டு கேட்டுகள் உண்டு. தெற்குப்புறம் உள்ளே வருவதற்கான 'இன்' கேட். அவுட் கேட் கிழக்குத் திசையில் இருந்தது. 'வெளியே செல்வதற்கான அந்தக் கேட்டருகே இந்த மைன்களை வைத்து விட்டால்...?

'என்ன நடக்கும்? எஜமான் போலீஸை அழைத்துக் கொண்டு வருவதற்கு முன்பே ஒருவேளை போவும் மாலியும் கிளம்பிவிட்டார்கள் என்றால், ''நீங்கள் வெளியே போங்கள். யாருக்கும் சந்தேகம் தோன்றாதிருக்க கேட்டைச் சாத்திக் கொண்டு வந்து வண்டியில் ஏறிக் கொள்கிறேன்'' என்று சொல்ல வேண்டியது. அவர்கள் அவசரத்தில் யோசியாமல் கிளம்பிப் போவார்கள். பழக்கம் காரணமாக அவுட் கேட் வழியாகத்தான் வண்டியைச் செலுத்துவார்கள். ஆனால் கேட்டை உயிரோடு தாண்ட மாட்டார்கள்!

'பிரமிளாவைப் பின்னோடு இன்று அழைத்துப் போகக் கூடாது. அவர்கள் கேட்டால், ''அவள் வீட்டில் தயாராக இருப்பாள். நம் காரியம் முடிந்து கம்பி நீட்டும்போது வழியில் ஒரு நிமிஷம் வீட்டு வாசலில் நிறுத்தி அவளை ஏற்றிக் கொண்டு போய்விடலாம்'' என்று சொல்ல வேண்டியது.

'இவர்கள் பெங்களூருக்குப் புறப்படுவதற்கு முன்பே எஜமான் போலீஸாருடன் வந்து விட்டால் ரொம்ப நல்லதாகப் போயிற்று. எல்லாரும் கைது ஆனதும் தான் முன்னெச்சரிக்கையாக அவுட் கேட்டருகே வெடி வைத்திருப்பதாகச் சொல்லி உஷார்ப்படுத்திவிடலாம். பிறகு வெடி வைக்கத் தெரிந்த எனக்கு அதை மெல்ல நீக்கிவிடும் சாமர்த்தியமும் உண்டு என்று நிரூபித்துக் காட்டலாம். எஜமான் பழக்கம் காரணமாக

'இன்' கேட் வழியாகத்தான் உள்ளே வருவார். அவருக்கு ஆபத்து ஏதுமில்லை.'

இவ்வாறெல்லாம் முடிவு செய்துகொண்டு செவப்பிரஸாத் வாண்ட் மைன்களை ஒரு பையில் போட்டு எடுத்துக்கொண்டு ஜாக்கிரதையாகப் போய்ச் சேர்ந்தான். மாலை ஆறு மணிக்கு வழக்கம் போல் அச்சகம் வெறிச்சோடிக் கிடந்தது. போவும் அவன் கூட்டாளியும் எட்டு மணிக்குத்தான் வருவார்கள். இரண்டு மணி நேரம் அவன் தன்னந் தனியாக விடப் பட்டான். ஆனால் அவனுக்குத் தேவை பத்துப் பதினைந்து நிமிஷங்களே அல்லவா?

* * *

சரியாக எட்டு மணிக்கு போவும் சரளாவும் மாலியும் வந்து விட்டார்கள். சைக்கிள்களை வீட்டிலேயே வைத்து விட்டு இன்று நடந்தே வந்து விட்டார்கள், இரவில் அவர்கள் இங்கு வந்ததற்கான தடயம் எதுவும் விட்டுச் செல்லக்கூடாது என்பதற்காக. காரியங்கள் துரிதமாக நடந்தேறின.

கடிகாரத்தில் மணி ஒன்பது அடிக்க ஆரம்பித்த தருணத்தில் வாசலில் ஒரு கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. எல்லாரும் திகைத்துப்போய் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். வாசல் கதவை உள்பக்கம் தாளிடுவது செவப்பிரஸாத்தின் வேலை. அந்தக் கடமையை அவன் இன்று வேண்டுமென்றே செய்யாதிருந்து விட்டான்! காரிலிருந்து இறங்கிய ஐந்து பேரும் மள மளவென்று உள்ளே நுழைந்தார்கள். அவர்களில் இருவர் கையில் துப்பாக்கிகள். முன்னதாக வந்தவன் குணசேகரன். அவன் பின்னால்... 'இதென்ன? இவர்கள் போலீஸ்காரர்கள் இல்லையா? கொள்ளைக்காரர்கள் போல் கண்ணுக்குக் கீழே முகத்தை மறைத்துத் துணி கட்டிக் கொண்டிருக்கிறார்களே! கையுறைகள் அணிந்திருக்கிறார்களே!' செவப்பிரஸாத்துக்குத் திகைப்பாக இருந்தது.

''என்ன முதலாளி இதெல்லாம்'' என்று கலவரத்துடன் கேட்டான்.

குணசேகரன் சிரித்தான். ''செவப்பிரஸாத்! போலீஸாருடன் வருவேன் என்று நினைத்தாய் இல்லையா? இதோ பார்; இப்போ உண்மையைச் சொன்னால் என்ன குடிமுழுகிப் போய் விடப் போகிறது? நாங்கள் எல்லோரும் நாக்ஸலைட்டுகள். தலைவர் மாவோவின் ஆணைப்படிதான் நான் இந்தப் பிரஸ்ஸையே ஆரம்பித்து நவீன உபகரணங்களைத் தருவித்தேன். நாக்ஸலைட் இயக்கம் வளரப் பணம் வேண்டும். அதற்காக மட்டுமின்றிக் கள்ள நோட்டுக்களை ஏராளமாக அச்சிட்டுப் பரப்பினால் இந்த நாட்டின் பொருளாதாரமும் சீர்குலையும். இந்த நோக்கத்தில் நானே இங்கே கள்ள நோட்டுக்களை அச்சடிக்க இருந்தேன்.''

''ஓ! அதனால்தான் பேச்சுவாக்கில் அருமையான கள்ள நோட்டுக்களைத் தயாரிக்கலாம் என்று சொன்னீர்களா?'' என்று திகைப்பையும் மீறிக் கேட்டான் போ.

''ஆமாம்! வாய் தவறி அப்படிச் சொன்னது உன்னிடம் ஆசையை வளர்த்து விட்டதடா, போ! இரவு நேரத்தில் நான் இங்கே என்ன காரியத்தைச் செய்ய உத்தேசித்திருந்தேனோ அதை நீங்களே செய்ய ஆரம்பித்




ரிப்பேர்க்காரர்: உங்க சிரமம் புரியறது. ஆனா உங்களைவிட முன்னாலேயே ரிப்பேருக்குக் கொடுத்தவங்களெல்லாம் பொறுமையா காத்துண்டிருக்காங்களே. உங்களுக்கு மட்டும் என்ன அவசரம்?

தீர்கள். அதனால் என்வேலை எளிதாகிவிட்டது. தப்பித் தவறிப் போலீசுக்குச் செய்தி எட்டினாலும் பழியை நீங்களே முழுமையாகச் சுமக்கலாம் அல்லவா?''

''ஆனால் இப்போது முயற்சியில் நாங்கள் வெற்றி கண்ட பிறகு, எங்கள் உழைப்பின் பலனை நீ தட்டிக் கொண்டு போய்விடப் பார்க்கிறாய்!''

''ஆமாம்; எனக்காக அல்ல; நாக்ஸலைட்டு இயக்கத்துக்காக! என்னை நீங்கள் காட்டிக் கொடுக்க மாட்டீர்கள். ஏனென்றால் என்னோடு சேர்ந்து நீங்களும் கம்பி எண்ணும்படியாகும். இங்குள்ள என் தோழர்கள் இந்தப் பணத்தையெல்லாம் எடுத்துக்கொண்டு நாட்டின் நாலா திசைகளுக்கும் பரவிச் சென்று மாவோ துங்கின் விருப்பங்களை நிறைவேற்றுவார்கள்.''

''அடப் பாவி! உன்னை நம்பி மோசம் போனேனே'' என்று கத்தினான் செவப்பிரஸாத். அடுத்த கணம் அவன் டெலிபோன் பக்கம் பாய்ந்தான்.

அவனுடைய எண்ணம் என்ன என்பது குணசேகரனுக்கு உடனே புரிந்து விட்டது. அவன் ஆள்காட்டி விரல் அழுந்தியது. சைலன்ஸர் பொருத்தப்பட்ட துப்பாக்கி, தோட்டாவைக் கக்கியது. செவப்பிரஸாத் தொய்ந்தான், சுருண்டான், விழுந்தான். நாட்டைக் காத்த உறுதியுடன் அவன் அச்சகத்தைக் காத்தான். அச்சகத்தைக் காத்த அதே தீரத்துடன் இப்போது அவன் மீண்டும் நாட்டைக் காத்தான்.

''இது உங்களுக்கு ஒரு பாடமாக இருக்கட்டும்; நாங்கள் எதற்கும் துணிந்தவர்கள் என்று புரிகிறதல்லவா? இங்கு நடந்தது பற்றி மூச்சு விடக் கூடாது நீங்கள்'' என்றான் குணசேகரன். ''ஒருவேளை என்னைப் பற்றி நீங்கள் புகார் செய்து நான் பிடிபட்டால் இங்கிருக்கும் என் தோழர்கள் உங்களைப் பழி வாங்கி விடுவார்கள். ஜாக்கிரதை!''

இவ்வாறு மிரட்டி விட்டுக் குணசேகரன் உத்தரவுகள் பிறப்பித்தான். இரண்டு பேர் செவப்பிரஸாதின் உடலைத் தூக்கிக் கொண்டு போய்க் காரின் பின் ஸீட்டில் கிடத்தினார்கள். பிறகு ரூபாய் நோட்டுக் கட்டுக்களை ஸூட்கேஸ்களில் அடுக்கி வேனில் ஏற்றினார்கள்.

"போ! உன்னுடைய திட்டம் அருமையானது" என்று வாழ்த்தினான் குணசேகரன்.

"அது கடைசிவரை நிறைவேறும். ஆட்கள் தான் மாறுகின்றனர். நோக்கம்தான் மாறுகிறது. பங்களூர் பாதையில் இரவு நேரத்தில் ஏகாந்தமான இடத்தில் இனி தேவையற்ற பிளாக்குகளையும் புரூப் காகிதங்களையும் புதைக்கும் போது குழியைச் சற்றுப் பெரிதாகவே வெட்டி சிவப்பிரஸாதையும் புதைத்து விடுகிறோம். ரத்தக் கறை ஏதுமில்லாமல் காரையும் சுத்தப்படுத்தி விடுகிறோம். இவர்களைப் பங்களூரில் ரயிலேற்றி நாலு திசைகளில் அனுப்பி வைத்து விட்டு நானே மறு நாள் நான் மட்டும் திரும்புகிறேன். வானைத் திருப்பி இங்கே ஓட்டிவர ஒரு டிரைவரை பங்களூரில் தாற்காலிகமாக ஏற்பாடு செய்து கொள்ளுகிறேன். அச்சகம் வழக்கம் போல் நடக்கும். தவறாமல் வேலைக்கு வந்து விடுங்கள்."

சரளா கடுகடுவென்று முகத்தை வைத்துக் கொண்டு ஏதோ முணுமுணுத்தாள்.

"என்ன சரளா? என்ன சொல்ல வேண்டுமோ சொல்லு!" என்று பெருந்தன்மையுடன் சந்தர்ப்பம் அளித்தான் குணசேகரன்.

"சிவப்பிரஸாதின் ஆவி உன்னைச் சும்மா விடாதுடா கடன்காரா!" என்று சபித்தாள் சரளா.

குணசேகரன் சிரித்தான். "ஆவி! சரளா! எனக்கு அதிலெல்லாம் நம்பிக்கை கிடையாது. நான் நம்புவது மாசே துங் ஒருவரைத்தான். அவர் போதனைகளை மட்டும்தான். வரட்டுமா?"

வாசலுக்குச் சென்ற குணசேகரன், "வானை முதலில் நான் ஓட்டிக் கொண்டு போகிறேன், நீ பின்னாலேயே காரைச் செலுத்திக்கிட்டு வா" என்று ஒருவனிடம் உத்தரவு பிறப்பித்தான். மற்றவர்களைப் பார்த்து, "நீங்கள் எல்லாரும் வானில் ஏறிக்கொள்ளுங்கள்" என்றான்.

அவர்கள் விளக்குகளை அணைத்து விட்டு, வீடு திரும்ப வாசலுக்கு வந்தார்கள். கதவை இழுத்துச் சாத்தித் தாளிட்டு விட்டு மேல் படியில் இறங்கக் கால் வைத்த சமயம் அந்தப் பயங்கர ஓசை கேட்டது!

* * *

மறுநாள் காலை போ, தினசரியை இரைந்து படிக்க மாலியும் சரளாவும் ஆர்வத்துடன் கேட்டனர்.

"சென்னையில் வெடி விபத்து — நாக்ஸலைட்டுகள் மரணம்" என்ற தலைப்பின் கீழ் செய்தி வெளியாகி யிருந்தது.

"சேகர் பிரின்டிங் ஒர்க்ஸ் முதலாளி குணசேகரன் நேற்று ஒரு கோரமான வெடி விபத்தில் மாண்டார். இவர் ஒரு நாக்ஸலைட் என்றும் தமது அச்சகத்தில் சில நாக்ஸலைட் தோழர்களுடன் கள்ள நோட்டுக்களை அச்சடித்துக் கொண்டிருந்தார் என்றும் தெரிய வருகிறது. இதைத் தடுக்க முற்பட்ட சிவப்பிரஸாத் என்ற காவல்காரரைச் சுட்டுக் கொன்றுவிட்டுப் பிரேதத்தைக் காரில் ஏற்றிக் கொண்டு புறப்படுகையில் வெடி விபத்தில் முன்னால் சென்ற வான் நொறுங்கியது. பின்னாலேயே காரை ஓட்டி வந்த நபரும் இவ் விபத்தினால் பலமான காயங்கள் அடைந்து, பிரக்ஞையற்ற நிலையில் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்படுகையில் வழியிலேயே மாண்டார். காரின் பின் ஸீட்டில் சிவப்பிரஸாதின் பிரேதம் துப்பாக்கிக் குண்டு பாய்ந்த காயத்துடன் இருந்தது. இவர்கள் இவ்வாறு தப்ப முற்படலாம் என்று எண்ணி சிவப்பிரஸாத் கேட்டருகே வெடி வைத்திருந்தார் என்று ஊகிக்கப்படுகிறது. சிவப்பிரஸாத் ராணுவத்தில் பணியாற்றியவர் என்பது குறிப்பிடத்தக்கது. வானில் இவர்கள் அச்சடித்த கள்ள நோட்டுகளும் கருகிய நிலையில் கண்டெடுக்கப்பட்டன. இறந்தவர்களில் இருவர் நாக்ஸலைட்டுகள் எனப் போலீஸார் உறுதிப்படுத்தியிருக்கின்றனர். ஆகவே சிவப்பிரஸாத் தவிர மற்றவர்களும் நாக்ஸலைட்டுகளே என்ற முடிவுக்கு வந்திருக்கின்றனர். இந்தக் கோரமான சம்பவத்தில் சிவப்பிரஸாத் உட்பட மொத்தம் ஆறுபேர் உயிர் துறந்திருக்கின்றனர்."

"சப்ஜாடா குளோஸ்!" என்றான் போ. தினத்தாளைக் கீழே மடித்துப் போட்டுவிட்டு, "நம்மைக் காட்டிக் கொடுக்கக் கூடியவர்களாக யாரும் மிஞ்சவில்லை. நல்லவேளை, வெடிச் சத்தம் கேட்டதுமே திரும்பிக் கூடப் பார்க்காமல் 'இன்' கேட் வழியாகத் தலை தெறிக்க ஓடி வந்து விட்டோம் வீட்டுக்கு. கூட்டம் சேருவதற்கு முன்னால் அங்கிருந்து கிளம்பி விட்டபடியால் பிழைத்தோம்! அந்த நேரத்தில் அந்தப் பக்கம் நம்மை யாராவது பார்த்து அந்த அச்சகத்தில் வேலை செய்பவர்கள் என்று அடையாளம் கண்டுகொண்டிருந்தால்...?"

"அரோகராதான்! நம்மீதும் சந்தேகம் வலுப்பட்டிருக்கும். ஆனால் இப்போ எனக்கு என்ன தோன்றுகிறது. தெரியுமா? ஏன் நாமே போய்ப் போலீஸாரிடம் உண்மையை ஒப்புக் கொள்ளக் கூடாது என்று படுகிறது!"

"அடப் பாவி! ஏண்டா உனக்கு இந்த ஞானோதயம் திடீரென்று?"

"ஞானோதயம் ஒன்றும் இல்லை; பொறாமை! ஏக்கம்! எத்தனை பாடுபட்டு அழகான நோட்டுக்கள் தயாரித்தோம்? அவற்றைத் தயாரித்த பெருமையையெல்லாம் நாக்ஸலைட்டுக்கள் தட்டிக் கொண்டு போகிறார்களே!"

"போனாலும் போகட்டும்டா; அந்தப் பெருமையில் பங்கு நமக்கு வேண்டாம்" என்றான் போ.

"எனக்கு என்ன தோன்றுகிறது, தெரியுமா?" என்று கேட்டாள் சரளா. இருவரும் அவளைத் திரும்பிப் பார்த்தனர். "'பணத்தின் மணம், பணத்தின் மணம்' என்று அடிக்கடி சொல்வீர்களே, அந்தப் பணம் எரிந்து சாம்பராவதற்காக ஒரு வெடிச் சத்தம் எழுந்ததல்லவா? அப்போது கிளம்பிய புகை மணத்தை ஓடுகிற ஓட்டத்தின் இடையிலும் நான் உணர்ந்தேன். அந்த மணம், பணத்தின் மணத்தை விடச் சுகமானதாக எனக்குப் பட்டது!" என்றாள்.

"எங்கேடா கிளம்பிட்டே?" என்று எழுந்திருந்த மாலியை வினவினான் போ.

"பாவம், பிரமிளா தனியா அழுதுண்டு இருப்பாள். அவளுக்கு இனி என்னை விட்டால் வேறு யார் துணை?" என்று கூறியபடி தெருப் பக்கம் நடந்தான் மாலி.

# ஸ்ரீமதி சிரிக்கிறாள்

## மலர்மன்னன்

நேற்றிரவோடு மூன்றாவது நாளாக அவனுக்கு இரவில் உறக்கம் வரவில்லை. இனிமேல் தனக்கு எப்பொழுதுமே உறக்கம் வராமல் போய்விடுமோ என்று அடிக்கடி அவன் கவலைப் பட்டுக் கொண்டிருந்தான். உடனுக்குடன் அதிதீவிரமான மனச் சலனங்களின் எழுச்சியால் அந்தக் கவலையை மறந்து கொண்டுமிருந்தான்.




பொழுது புலர்ந்து வெகு நேரமாகிவிட்டிருந்தது. ஆனால் அவன் இன்னமும் 'இரவு கழிந்து விட்டது' என்கிற உணர்வு வரப்பெறாமல் பிரமை பிடித்தவன்போல் மேலே சுழலும் மின் விசிறியை வெறித்துப் பார்த்த படி கட்டிலில் மல்லாந்து கிடந்தான்.

மூன்று நாட்களுக்கு முன்பெல்லாம் காலையில் ஐந்து மணி அடிப்பதற்குச் சற்று முன்னதாகவே அந்த வீட்டின் அடுக்களையில் விளக்கெரியத் தொடங்கி விடும்.

எரிவாயு அடுப்பின் இரு பீடங்களிலும் நீல நிற வளையங்களாய் ஒளிரும் தழல்மீது இரண்டு பாத்திரங்கள் உட்கார்ந்திருக்க, அவற்றுக்கெதிரில் சுமதி ஒரு ஸ்டூலைப் போட்டு அமர்ந்து கொண்டிருப்பாள். ஒரு பாத்திரத்தில் பால் காயும். இன்னொன்றில் தண்ணீர் வெந்நீராகிக் கொண்டிருக்கும் — காப்பி டிகாக்ஷன் இறக்க.

சாதாரணமாய் அவனுக்கு ஆறு மணிக்கு மேலேதான் விழிப்புக் கொடுக்கும். ஆனால் விழிப்புக் கொடுத்து விட்ட பிறகு ஒரு கணங்கூட அவனால் படுக்கையில் சோம்பிக் கிடக்க முடியாது. முதுகடியில் ஏதோ உறுத்துகிறமாதிரி பரபரப்புடன் துள்ளி எழுவான். குளியலறைக்கு விரைந்து அவசரம் அவசரமாகப் பல் துலக்கி முகம் கழுவிக் கொண்டு தேங்காய்ப் பூத் துவாலையால் நீரைத் துடைத்தவாறே அவன் திரும்பி வருகையில், சுமதி கையில் காப்பியுடன் அவனை வழி மறிப்பாள்.

''நீ சாப்பிட்டாச்சா?'' என்று கனிவோடு விசாரித்தவாறு காப்பி தம்ளரை அவளிடமிருந்து வாங்கிக்கொள்வான்.

''எப்பவோ ஆச்சு!'' என்று அவள் சிரிப்பாள். விஷயம் எதுவாக இருந்தாலும் அவளுக்குச் சிரித்துக் கொண்டுதான் பதில் சொல்ல வரும். எதற்கெடுத்தாலும் சிரிப்பு. அர்த்தமற்ற, அநாவசியமான சிரிப்பு; சிரித்துச் சிரித்துப் பேசுவதே சுபாவமாகி, அவளது இதழ்களில் எப்போதும் ஒரு புன்சிரிப்பு நிரந்தரமாகக் குடியேறி விட்டிருந்தது.

'இப்படி எடுத்ததற்கெல்லாம் எதற்காகச் சிரித்துக் கொண்டிருக்கிறாள்' என்று அவனுக்கே சில சமயங்களில் எரிச்சல் வரும். 'இவ்வளவு

வயதாகியும் துக்ககரமான எதுவும் இவளுக்கோ, இவள் கல்யாணமோ நேரவில்லையா? இவள் மனசுக்கு எதுவுமே சிரிப்புக்குரியதுதானா?" என்று பல தடவைகள் அவன் மிரண்டதுண்டு.

ஆனால் கடந்த ஒரு வார காலத்தில் கமலியின் சிரிப்புக்கு அர்த்தம் கற்பித்துக் கொள்வது அவனுக்குச் சாத்தியமாகி விட்டது.

சே, எவ்வளவு நாணயமற்ற சிரிப்பு அது!

ஏமாற்றுவதற்கென்றே பழக்கப்படுத்திக் கொண்ட சிரிப்பு. எதையும் மூடி மறைக்கப் பயன்படுகிற — கண்களில் மண்ணைத் தூவி விட உதவுகிற — சிரிப்பு. கண்கட்டு வித்தைக்காரன் கையில் இருக்கிற மந்திரக்கோல் மாதிரி கவனத்தைத் திசை திருப்பிவிடப் பிரயோகிக்கப்படும் சாதுரியமான ஆயுதம் அந்தச் சிரிப்பு. அவளது அருவருப்பூட்டுகிற அந்தரங்கத்தை அந்த அழகான சிரிப்புத்தான் ஒரு திரையாக இருந்து வெளியே தெரிந்து விடாமல் கட்டிக் காத்து வந்திருக்கிறது....

'இனி மேல் அந்தச் சிரிப்பை நான் காண வேண்டிய சந்தர்ப்பம் வராது' என்று அவன் மல்லாந்து படுத்தவாறு நினைத்துக் கொண்டு, அந்த நினைப்பில் ஆறுதல் பெற முயன்றான். அடுத்த கணமே, இந்த முயற்சியில் தனக்கு வெற்றி கிட்டப் போவதில்லை என்று மிகத் தெளிவாக உணர்ந்து, அவன் தன்னிரக்கம் மேலிட, சோர்வடைந்தான்.

இப்பொழுதும் தனக்குப் பின்னால் கமலி திருட்டுத்தனமாக வந்து நின்று கொண்டு சிரிப்பதுபோல் பிரமையுற்று அவன் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்து திரும்பிப் பார்த்தான்.

அறை வெறிச்சிட்டுக் கிடந்தது.

அவன் சற்று நிம்மதியடைந்தவனாகக் கட்டிலை விட்டிறங்கி, பொழுது விடிந்துவிட்டதை இனங் கண்டு கொண்டு குளியல் அறையை நோக்கி நடந்தான்.

குளியலறைக் கதவைத் திறந்து உள்ளே நுழையப் போனவன் கதவுக்குப் பின்னால் ஏதோ நிழலாடுவதைக் கண்டு திகைப்புற்றுப் பின்வாங்கினான்.

திருமணமான புதிதில் ஒரு தடவை கமலி குளியல் அறைக் கதவுக்குப் பின்னால் ஒளிந்து கொண்டிருந்து அவன் உள்ளே நுழைந்ததும் குழந்தைத்தனமாகக் கூவிப் பயமுறுத்தியது அவனுக்கு நினைவு வந்தது.

அதற்கப்புறம் வெகுநாட்களுக்கு அந்தச் சம்பவத்தை நினைவூட்டி ஊட்டி அவள் விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டிருந்தாள்.

இப்போதும் அதே போல நேரிடக்கூடும் என்று அசட்டுத்தனமாக நினைத்து, உடனே தனது மடமைக்காக அவன் தன்னைத் தானே பரிகசித்துக் கொண்டான். இருப்பினும் உள்ளூற அவனுக்கு அச்சமாகத்தான் இருந்தது. தயக்கத்துடன் தலையை மட்டும் உள்ளே நீட்டிக் கதவுக்குப் பின்னாலும் பார்த்தான்.

கதவு மறைவில் துணிகளை மாட்டுவதற்காக வரிசையாக அடித்து வைத்திருந்த கொக்கிகளுள் ஒன்றில் கமலியின் சேலை நீளமாகத் தொங்கிக் கொண்டிருந்தது....

அது வெறும் சேலைதான் என்று நிச்சயப்படுத்திக் கொள்வதற்குள் அவனுக்கு முகம் முழுவதும் முத்து முத்தாக வியர்த்து விட்டது. சட்டென்று உள்ளே புகுந்து குழாய் நீரை வாளியில் நிரப்பிக் கொள்ளக்கூடப் பொறுமையின்றி ஆடைகளைக் களையாமலேயே குழாயடியில் உட்கார்ந்து விட்டான். திறந்துவிட்ட குழாயிலிருந்து பீச்சியடிக்க குளிர்ந்த நீர் உச்சந் தலையில் ஓசையுடன் பாய்ந்து முகம் வழியாகவும் பிடரி வழியாகவும் இழிந்திறங்கி அவனது உடம்பை நனைக்கத் தொடங்கியது.

உடம்புச் சூடு முற்றிலும் தணிந்து இலேசாகக் குளிர் நடுக்கத் தொடங்குகிற வரை அவன் குளித்துக் கொண்டேயிருந்தான். பல் வரிசைகள் அவனுக்குக் கட்டுப்படாமல் சுயாதீனமாக ஒன்றோடொன்று மோதிக் கொள்ள ஆரம்பித்த பின்னரே குழாயடியிலிருந்து எழுந்துகொள்ள அவனுக்கு மனம் வந்தது.

மாற்றுடைகளை அணிந்து கண்ணாடிக்கெதிரே நின்று தலை சீவிக் கொண்டிருக்கையில், கண்ணாடியில் தனக்குப் பின்னாலிருந்து கமலியின் சிரித்த முகம் தெரிவது போல் அவன் திடீரென்று உணர்ந்தான். அப்படி உணர்ந்த அந்தக் கணமே கண்ணுக்குப் புலப்படாத ஒரு கொடிய ஆயுதத்தால் தாக்குண்டதுபோல் அவன் உள்ளூறத் துடிதுடித்துப் போனான்.

எதிர்த்தாற்போல் இருக்கிற சுவரில் மாட்டியிருக்கிற கமலியின் பெரிதாக்கப்பட்ட புகைப்படம்தான் கண்ணாடியில் பிரதிபலிக்கிறது என்பது உடனடியாகவே அவனுக்குப் புலப்பட்டு விட்டது. எனினும் படபடப்பு அடங்கவில்லை.

சிறிது கலக்கத்துடன் அந்தச் சுவரை நோக்கிச் சென்றான். மெதுவாக அந்தப் படத்தைத் திருப்பி வைத்தான்.



கமலி இனிமேல் சுவரைத்தான் பார்த்துக் கொண்டிருந்தாக வேண்டும். அவளது சிரித்த முகம் கண்ணாடி வழியாக அவனைப் பார்ப்பது இனி சாத்தியமல்ல....

அர்த்தமற்ற திருப்தியுடன் திரும்பவும் தலை சீவிக் கொள்ள அவன் கண்ணாடி எதிரே வந்து நின்று கொண்டான்.

வியிடு எடுத்துக் கொள்ளத் தலையைச் சிறிது சாய்த்துக் கொண்டபோது கண்ணாடியில் சுமதியின் சிரித்த முகம் மீண்டும் பிரதிபலிப்பதைக் கண்டு- அவன் விக்கித்துப் போனான். பீதியுடன் சுவரைத் திரும்பிப் பார்த்தான்.

இல்லை. வீண் பிரமை...., புகைப்படம் கவிழ்ந்துதான் இருக்கிறது; சுமதியின் சிரித்த முகத்துக்குப் பதிலாக வெறும் தகரம்தான் தெரிகிறது....

நிம்மதியடைந்தவனாய் மறுபடியும் கண்ணாடியில் முகம் பார்த்துத் தலை சீவிக் கொள்ளலானான். இதென்ன, மறுபடியும் சுமதியின் சிரித்த முகம் தெரிகிறதா ?

ஆத்திரத்துடன் தலையைச் சரியாகச் சீவிக் கொள்ளாமலேயே சீப்பை வீசியெறிந்து விட்டு வெளியேறினான்.

'குறைந்தது ஒரு மாத காலமாவது இந்தப் பக்கமே தலைகாட்டாமல் எங்காவது உல்லாசமாகப் பயணம் போய்விட வேண்டும். இல்லாவிட்டால் இந்தச் சுமதியின் சிரித்த முகம் தன்னைக் கண்காணித்துக் கொண்டிருப்பதுபோல் உள்ளுணர்வில் ஒரு மிரட்சி....'

கடைசிவரையில் அந்தச் சிரிப்பு அவனது அந்தரங்கத்தைத் திரையிட்டு மூடிப் பாதுகாத்துவிட்டதை நினைக்க நினைக்க அவனுக்கு ஆத்திரம் அடி வயிற்றிலிருந்து பற்றிக் கொண்டு வந்தது.

'இங்கிருக்கிற வரை என் மனசுக்கு நிம்மதி கிடைக்கப் போவதில்லை. தபால் மூலமே அலுவலகத்துக்கு ஒரு மாத விடுமுறை கோரி விண்ணப்பம் எழுதிப் போட்டு விட்டு இன்றைக்கே இங்கிருந்து புறப்பட்டு விட வேண்டும்' என்று தீர்மானித்துக் கொண்டவனாய் அவன் இயந்திர கதியில் தனது பயணத்துக்கு ஆயத்தம் புரியலானான்.

அலமாரியைத் திறந்து தன்னுடைய உடைகளை அவன் அலுங்காமல் வெளியே எடுத்தபோது அவற்றுக்கடியிலிருந்து ஒரு காகிதத் துண்டு வெளிப்பட்டுக் கீழ் நோக்கிப் பறந்தது. உடைகளைத் தோல் பெட்டியில் வைத்து விட்டுத் தரையில் விழுந்து கிடந்த அந்தக் காகிதத்தை அசிரத்தையாக எடுத்தான். யாரோ எழுதிய கடிதம்.

'அன்புள்ள சுமதிக்கு,

கடைசியில் உன்னிடம் நேரில் விடை பெற்றுக் கொள்ளாமலேயே இங்கிருந்து புறப்பட வேண்டியதாகி விட்டது. எனது நிலை உனக்குத் தெரியுமாதலால் இதனைப் பொருட்படுத்த மாட்டாய் என்று நம்புகிறேன். மூன்று நாட்களுக்கு மேல் நான் ஒரே இடத்தில் தங்குவதில்லை. தங்கவும் கூடாது. அது ஆபத்து! ஆனால் உன் பாசம் என்னை நாலைந்து நாட்களுக்கும் அதிகமாகவே இங்கு தங்க வைத்துவிட்டது. இனியும் நான் இங்கே தங்குவது உனக்கும் சரி, எனக்கும் சரி, உசிதமல்ல. ஆகவே, புறப்பட்டுவிட்டேன். உன்னைத் தேடி நான் வந்த போதெல்லாம் ஒரு தாயின் பரிவோடு என்னைக் கவனித்துக் கொண்டதற்கு நன்றி. நீ என்னைவிட மூன்று வயது சிறியவள்தான். ஆனால், நாலைந்து நாட்களுக்குத்தான் என்றாலும் நீ என்னைப் பராமரித்த பாங்கை நினைத்துப் பார்க்கும்போது உன்னை என்னைவிடப் பெரியவளாக, ஏன், நம் அம்மாவாகவேதான் பாவிக்கத் தோன்றுகிறது.

திருட்டுத்தனமாக நான் உன் வீட்டுக்கு வந்து போய்க் கொண்டிருந்த நாட்களில் நிலைமையைச் சமாளிக்க நீ எவ்வளவு சிரமப்பட்டிருப்பாய் என்பதை என்னால் ஊகித்துக் கொள்ள முடிகிறது. என் பாதுகாப்பைக் கருதி, நான் வந்து போவதை நீ மாப்பிள்ளையிடம் (உன் கணவரைத்தான் குறிப்பிடுகிறேன்) கூடத் தெரிவித்திருக்க மாட்டாய் என்று நினைக்கிறேன். நீயும்தான் எந்தத் தைரியத்தில் என் வருகையை அவரிடம் அறிவித்திருக்க முடியும் ?

எல்லாரையும் போல் உரிமையோடு உடன் பிறந்தவள் வீட்டுக்கு வந்து அவளையும் அவள் புருஷனையும் பகிரங்கமாகச் சந்திக்க முடியாதபடி எனது வாழ்க்கை திசை திரும்பிப் போய் விட்டிருப்பதை நினைக்க நினைக்க எனக்கே வருத்தமாகத்தான் இருக்கிறது. ஆனால் வருந்திப் பயன் என்ன?

மாப்பிள்ளைக்கு என் அன்பை மானசிகமாகத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இக்கடிதத்தைப் படித்ததும் துண்டு துண்டாகக் கிழித்து நெருப்பிலிட்டுப் பொசுக்கிவிடத் தவறாதே. உனக்கு மறதி அதிகம். அதனால்தான் வெளிப்படையாக இப்படி அறிவுறுத்த வேண்டியிருக்கிறது.

போய் வருகிறேன் சுமதி....

உன் பிரியமுள்ள
முரளி.'

கடிதத்தை அவன் திரும்பப் படித்துப் பார்த்தான். ஒவ்வொரு தடவையும் படிக்கப் படிக்க மனத் துடிப்பு பன்மடங்காய்ப் பெருகி அவனை நிலைகுலைய வைத்தது.

அப்படியானால் கடந்து போன வாரத்தில் அவன் தன் வீட்டில் மோப்பம் பிடித்த அந்நிய ஆண் வாடை நக்ஸலைட்டாக மாறித் தீ வைப்பு, வழிப்பறி, கொலை என்று பலவிதமான குற்றங்களுக்காகத் தேடப்பட்டு வருகிற சுமதியின் அண்ணன் முரளியுடையதுதானா?

குளியலறை அருகே அணைந்து கிடந்த பாதிச் சுருட்டு, கண்ணாடிக்குப் பின்னாலிருந்து தற்செயலாக அவன் பார்வையில் பட்ட பழுப்புநிற கிராப்புச் சீப்பு, வழக்கமாக அவன் உபயோகிக்கும் பிளேடு அல்லாத வேறு பெயர் கொண்ட பிளேடு... இப்படி அவனது நெஞ்சை உலுக்கிச் சுமதியைப் பற்றி விபரீதமான எண்ணங்களைத் தோற்றுவித்த தடயங்கள் எல்லாமே தலைமறைவாக இருந்து வரும் முரளி தவறுதலாக விட்டுச் சென்றவை தாமா ?

அவன் மெய் விதிர்விதிர்த்துப் போனான்.

சுமதியிடம் முதலில் ஜாடைமாடையாக அது பற்றி விசாரித்து, இவள் இதற்கெல்லாம் மசியமாட்டாள் என்று புரிந்து கொண்டு, சிநேக பாவத்துடன் எப்போதும் போல் அவளிடம் பழகத் தொடங்கி உண்மையை அவளிடமிருந்து கறந்துவிட, தான் மேற்கொண்ட முயற்சிகளை நினைத்துப் பார்த்து அவன் பரிதவித்தான்.

எதையும் தாண்டித் துருவி விசாரிக்காமல் அவள் அடங்கிப் போனாலும் அவன்

இரு இடங்களிலும்
சிறப்பாக பணியாற்ற –

# பேருதவி புரிகிறது பிரஸ்டிஜ் Prestige

உங்களைப் போன்ற பெண்கள் அலுவலகம் செல்வதால் வீட்டு வேலைகள் தடைப்படாமலிருக்கவே தயாராகிறது பிரஸ்டிஜ் (ப்ரீத் என்பது இதன் ஏற்றுமதிப் பெயர்). ஆகவே உங்களால் இரு இடங்களிலும் சிரமமின்றி சிறப்பாகப் பணியாற்ற முடிகிறது.

நேரத்தை மிச்சப்படுத்துகிறது பிரஸ்டிஜ் (அல்லது ப்ரீத்); எப்படியெனில் எப்பொழுதையும் விட கால்பங்கு நேரத்திலேயே சமையல் தயார்!...அதுவும் பலவகைப் பதார்த்தங்களுடன்!'

எரிபொருள் சிக்கனத்துடன், சமையல் அறையும் துப்புரவாக இருக்க உதவும், பிரிஸ்டிஜ்/ப்ரீத். ஆகவே திறமையாக செயல்பட வழி செய்கிறது. பிரஸ்டிஜ் அல்லது ப்ரீத் குக்கரில் தயாரான உணவுகளில் ஊட்டச்சத்தும் மிகுந்துள்ளது.

பிரஸ்டிஜ், ப்ரீத் இரண்டுமே வாழ்நாள் பூராவும் உழைக்க உத்தரவாதமுள்ளவை. மேலும் நாடு பூராவிலும் விற்பனைக்குப் பின் பராமரிப்புச் சேவை அளிப்பதும் இது ஒன்றே. உதிரி உறுப்புகள் எங்கும் கிடைக்கின்றன.

TTP-6175

பரிவுடன் பேருதவியளிப்பது—பிரஸ்டிஜ்/ப்ரீத்.

பிரஸ்டிஜ் ஒன்று பெறுங்கள்—வேலைக்குச் செல்லும் பெண்மணியாகவும் வீட்டைப் பேணும் தலைவியாகவும் விளங்குங்கள்.







டி டி. பிரைவேட் லிமிடெட், பெங்களூர்-16

அந்த விஷயத்தை அலட்சியமாக விட்டுவிட்டான் என்று அவளுக்குத் தோன்றியிருக்க வேண்டும். ஆனால் உள்ளுக்குள் அவன் சாம்பல் பூத்த நெருப்புத் துண்டாகக் கனிந்து கொண்டுதான் இருந்தான்.

மூன்று நாட்களுக்குமுன்பு மாலை நேரத்தில் அவளும் அவனுமாக மொட்டை மாடியில் தனித்திருந்த போது வெகு சாமர்த்தியமாக அவன் திரும்பவும் அதைப் பற்றிப் பேச்செடுத்தான். வழக்கம்போல் அவள் சிரித்து மழுப்பினாள்.

அவன் பொறுமையாகத்தான் இருந்தான். மிகவும் சிரமப்பட்டுத் தனது ஆவேசத்தை அடக்கிக் கொண்டான். ஆனால் அவனது மன நிலையை அவள் உணரவேயில்லை. ஒரு பாவமும் அறியாதவளாய் அவள் பாட்டுக்குச் சிரித்துச் சிரித்துப் பேசியது அவனது பொறுமையை அளவுக்கு மீறிச் சோதித்து விட்டது.

'பாவி, அவள் மட்டும் விளையாட்டுத்தனமாக இராமல் கொஞ்சம் விவேகமாக நடந்து கொண்டிருந்தால்...' — தொடர்ந்து சிக்கத் திராணியின்றி அந்தச் சிந்தனையையே விசியெறிந்துவிட யத்தனிப்பதுபோல் அவன் தலையை உதறிக் கொண்டான்.

சுமதிக்கு முரளி எழுதிய கடிதம் அவனது கைவிரல்களுக்கு நடுவே இலேசாக நடுங்கிக் கொண்டிருந்தது. அதைப் படித்ததுமே கிழித்துப் போட்டுவிடுமாறு முரளி முன்னெச்சரிக்கையுடன் அறிவுறுத்தியிருந்தும் சுமதி மறதியின் காரணமாகவோ, சந்தர்ப்பக் கோளாறின் விளைவாகவோ அப்படிச் செய்யாமலிருந்து விட்டதால் தன் மனம் ஆறுதல் அடைவதற்கான வாய்ப்புக் கிட்டியமைக்கு அந்த நிலையிலும் அவன் அர்த்தமற்று மகிழ்ந்தான். ஆமாம்; அவளையும் அறியாமலே மகத்தானதோர் ஆறுதலை அந்தக் கடிதம் அவனுக்கு அளித்துவிட்டிருந்தது.

அந்த ஆறுதல் மேலும் பரிபூரணமடைய இன்னொரு நடவடிக்கை எஞ்சியிருக்கிறது.

அவன் மெதுவாக அங்கிருந்து எழுந்தான். தனது அறையை நோக்கித் தெம்போடும் நிதானமாகவும் நடந்தான்.

தனது அறைச் சுவரில் மாட்டியிருந்த சுமதியின் புகைப்படத்தை அவன் திரும்பவும் சரியாக மாட்டினான். சுமதி அவனைப் பார்த்துச் சிரிக்கிறாள்....

'உன்னோட சிரிப்புக்கு இனிமேல் தடை போட மாட்டேன் சுமதி.... என்னை மன்னிச்சுடு' என்று அந்தப் புகைப்படத்துக்கு எதிரே நின்று நெஞ்சு நெகிழ அவன் மானசிகமாக வேண்டிக் கொண்டான். பிறகு, நிச்சலமான மனத்துடன் மேஜையினருகே சென்றான்.

மேஜை மீதிருந்த டெலிபோனிலிருந்து ரிசீவரைக் கையில் எடுத்து எண்களைச் சுழற்றினான். ரிசீவரைக் காதில் பொருத்திக் கொண்டு, எதிர்முனையில் தனக்கு வேண்டிய நபரின் குரல் கேட்டதும், "குட்மார்னிங் சார்... ஐ — டிவிஷன் சப் இன்ஸ்பெக்டர் கதிரேசன் பேசறேன்" என்று உணர்ச்சியற்ற குரலில் கூறினான்.

"சொல்லுங்க, கதிரேசன்! என்ன விஷயம்? நீங்க ரொம்பவும் மனசு உடைஞ்சு போயிருப்பீங்கன்னு எனக்குத் தெரியும்..... இந்த 'ஷாக்'கிலேயிருந்து நீங்க விடுபட்டு 'நார்மலு'க்கு வர நாட்களாகும். அது வரைக்கும் 'டூட்டி'யைப் பத்திக் கவலைப்படாமே நல்லா ஓய்வு எடுத்துக்குங்க கதிரேசன். உடம்பைப் பார்த்துக்குங்க...."

"ம்... ம்... இது சம்பந்தமாப் பேசறதுக்குத்தான் உங்களைக் கூப்பிட்டேன் சார்.... ஆம், வீட்டிலேயிருந்துதான் பேசறேன்...."

"என்ன விஷயம் கதிரேசன்?" என்று எதிர்முனையிலிருந்த குரல் குழப்பத்துடன் வினவியது.

"ஒண்ணுமில்லே சார்.... என்னோட மனைவி சுமதி மொட்டை மாடியிலேயிருந்து கீழே விழுந்து செத்துப் போனா இல்லையா? அது தற்செயலாக நடந்தது இல்லே...அது விபத்தும் இல்லே!"

"நீங்க என்ன சொல்றீங்க, கதிரேசன்?"

"உள்ளதைத்தான் சொல்றேன் சார்.... அவள் தவறுதலாகக் கீழே விழல்லே...தானா வேணும்னும் விழல்லே.... என்னாலேதான்." தொடர்ந்து பேசமாட்டாமல் அவன் கீழ் உதட்டைப் பற்களால் அழுந்தக் கடித்துக் கொண்டான்.

எதிர் முனையிலிருந்து குரல் எழும்பவில்லை.

அவன் மெல்லத் தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டு மறுபடியும் பேசலானான் :

"ஹலோ...நான் பேசறது காதிலே விழுறதா? நான்தான் அவளைப் பிடிச்சுக் கீழே தள்ளினேன்...ஆமாம்...நான் நல்லபடியா, நிதான புத்தியோடுதான் பேசறேன் சார். உங்களுக்காக வீட்டிலேயே காத்துக்கிட்டிருக்கேன்....உடனே புறப்பட்டு வந்துடுங்க சார்...." — பதிலுக்குக் காத்திராமல் சட்டென்று ரிசீவரை டெலிபோனில் பொருத்தி விட்டுப் பெரிய சாதனை ஒன்றைப் புரிந்து விட்ட மன நிறைவுடன் அறையின் ஒரு மூலையிலிருந்த சோபாவை நோக்கி நடந்தான்.

சோபாவில் அவன் வாகாகச் சாய்ந்து உட்கார்ந்து கொண்டான். நெஞ்சில் கனத்த பெருஞ் சுமையைக் கீழே இறக்கி வைத்து விட்டதுபோல் உணர்ந்தான். உடம்பே தக்கை போல் இலேசாகிவிட்ட மாதிரி இருந்தது. நிம்மதியாகப் பெருமூச்செறிந்தான்.

இப்பொழுது அவன் பரம திருப்தியுடன் தைரியமாகத் தலையைத் திருப்பிச் சுவரில் புகைப்படமாகத் தொங்குகிற சுமதியின் சிரித்த முகத்தை ஏறிட்டு நோக்கினான்.

'நீ நல்லா சிரி சுமதி. என்னைப் பார்த்துச் சிரிச்சுக்கிட்டே இரு' என்று மனத்துள் சொல்லிக் கொண்டு அவன் சட்டென்று தலையைக் குனிந்து கொண்டு இரு கரங்களாலும் முகத்தைத் தாங்கிப் பிடித்தவாறு குமுறிக் குமுறி அழத் தொடங்கினான்.

பிறகு, அவன் தானாகவே ஒருவாறு மனம் தேறி, தனது வீட்டின் வாயிற்கதவு தட்டப்படுவதற்காகப் பொறுமையுடன் காத்துக் கொண்டிருந்தான்.

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor· T. Sadasivam

# ANNOUNCING!

The sale of

# BLENDED AND FANCY FABRICS

made by mixing cotton and

# GRASIM STAPLE FIBRE

from to-day at

## AKASH-DEEP, SANDHURST BRIDGE, CHOWPATTY

- Attractive Fancy Dress material for ladies
- Immaculate Bush Shirtings for gents
- Decorative Tapestry and Curtain materials
- Priced cheaper than cotton fabrics



**GWALIOR RAYON SILK MFG. (WVG.) CO. LTD., BIRLAGRAM, NAGDA (M.P.)**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon